# புதுமையின் பொலிவுக்கு

# ஹமாம்

நாள்தோறும் ஹமாம் தேய்த்துக் குளியுங்கள். ஹமாம் தரும் நறு மணமுள்ள நுரை உங்கள் சருமத்தை சுத்தம் செய்வதுடன், புத்துணர்ச்சியையும் அளிக்கிறது. உங்கள் மேனிக்கு கவர்ச்சியான மெருகையும் ஊட்டுகிறது. நெடுங்காலம்...நீடித்திருக்கும் ஹமாம் டாய்லெட் சோப்பை உபயோகியுங்கள்.




**அதிக காலம் நீடித்துழைக்கும் டாய்லெட் சோப்**

டாடா
தயாரிப்பு

CMTH-14-152 TAM

# எல்லா விதத்திலும் சிறந்த பல்புகள்

பிலிப்ஸ்




# பிலிப்ஸ் பல்புகள்




பிலிப்ஸ்—லாம்ப் மற்றும் ஒளித்துறையில் முன்னோடிகள்

பிலிப்ஸ் இந்தியா லிமிடெட்



# கல்கி

ராக்ஷஸ
ஐப்பசி 23

○

நவம்பர் 9
1975

○

"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே.




மேலே : கார் காரேஜுக்குப் போக எந்தச் சந்திலுள் நுழைய வேண்டும்?

கீழே : ... ப்பூச்சிகளை ஒரேமாதிரியாக ஜோடி சேருங்கள் பாக் ... புள்ளியுள்ள பகுதியில் வர்ணப் பென்சிலால் நிரப்பிப் பாருங்கள்.



## குடும்பத்தினர் அனைவரும் ஆரோக்கியத்துடன் திகழ ஃபாஸ்ஃபோமின் டானிக்









### ஃபாஸ்ஃபோமின் அயன்
**பெண்களுக்கான அயன் டானிக்**

ஃபாஸ்ஃபோமின் அயன் சத்துமிக்கச் சிவப்பு இரத்தம் உருவாகக் காரணமாயிருந்து உதவுவதுடன் உடலில் அயன் சத்தைச் சமநிலையில் பெற்றிருக்கவும் உதவுகிறது. இதில் பி காம்ப்ளெக்ஸ் விடமின்களும் பல்வேறு கிளிஸரோபாஸ்பேட்டுகளும் கூட அடங்கியுள்ளது. சக்தியும் ஆரோக்கியமும் பெற்றுத் திகழ உதவுவதுடன் களைப்பையும் விரட்டுகிறது. பெண்களுக்கென்று விசேஷ முறையில் உருவாக்கப்பட்டுள்ள முதல் டானிக்—ஃபாஸ்ஃபோமின் அயன்.

### ஃபாஸ்ஃபோமின் விடமின்
**குடும்பத்திற்கான விடமின் டானிக்**

பழரச மணம் கமழும் சிறந்த டானிக். ஆரோக்கிய முழுமையோடு உணவு நிறைவைக் கூட்டுகிறது. உங்கள் குடும்பத்தினர் யாவரும் ஆரோக்கியத்துடன் சுறுசுறுப்பாய்த் திகழச் செய்ய, மிக அவசியமான பி காம்ப்ளெக்ஸ் விடமின்கள் மற்றும் பல்வேறு கிளிஸரோபாஸ்பேட்டுகள் அடங்கியது. குடும்பம் முழுவதும் அருந்தி ஆரோக்கியத்துடன் மகிழ—ஃபாஸ்ஃபோமின் விடமின்.



ஃபாஸ்ஃபோமின் டானிக்குகள்—பசியைத் தூண்டி,
வலிவு, நோயெதிர்ப்புச் சக்தி கூட்டுவன!

TTT® SQUIBB® SARABHAI CHEMICALS LTD.

# பாராளுமன்றம் படுத்துவிடவில்லை!

**பா**ரத நாட்டில் பாராளுமன்ற ஜனநாயகம் படுத்துவிடவில்லை என்பதை உலகுக்கே நிரூபிப்பது போல் புது தில்லியில் காமன்வெல்த் பாராளுமன்ற மகாநாடு கூடியது.

மகாநாட்டைத் தொடங்கி வைத்த நமது ராஷ்டிரபதி, பாராளுமன்ற அமைப்புக்களைப் பலப்படுத்த வேண்டியதன் அவசியத்தை வலியுறுத்தினர். நமது அரசியல் சட்டம் தனி நபர் சுதந்திரங்களுடன் கூடிய பாராளுமன்ற ஜனநாயகத்தை நமக்கு உறுதி அளித்திருப்பதை எடுத்துக் கூறினர். ''சமூகப் பொருளாதார நியாயங்களை வழங்கி, அந்த அடிப்படையில் அனைவரும் சரிநிகர் சமானமாகக் கருதப்படும் ஒரு சமுதாயத்தை உருவாக்கும் லட்சியத்தை அரசியல் சட்டம் நம் முன் வைத்திருக்கிறது'' என்றார்.


கல்கி

மலர் 35

இதழ் 15






பிரதமர் அவர்கள் ராஷ்டிரபதியை மறுத்துப் பேசவில்லையாயினும், ''ஒரு தலைமுறையினரால் மிகச் சிறந்ததெனக் கருதப்பட்ட கோட்பாடுகளை அடுத்த தலைமுறையினர் அதே அளவுக்குச் சிறந்ததாகக் கருத வேண்டும் என்கிற அவசியமில்லை'' என்று கூறியுள்ளார்.

அதாவது ஜனநாயகத்தை அவர் ஏற்ருலும் இங்கே இன்று நிலவுகிற ஜனநாயக முறையில் அவர் அதிருப்தி அடைந்திருப்பது தெளிவாகிறது. எனவே, நமது தேசத்தின் ஜனநாயக அமைப்பில் அவர் சில மாறுதல்களைப் புகுத்த முற்படலாம் என்று ஊகிக்கவும் அவர் பேச்சு இடம் தருகிறது.

அந்த மாறுதல்கள் எதுவாயினும் அவை ராஷ்டிரபதி குறிப்பிட்டது போல ஜனநாயகத்தை மேலும் பலப்படுத்துவதாக அமைய வேண்டும்; பலவீனப்படுத்திவிடக் கூடாது.

நமது அரசியல் நிர்ணயச் சட்டத்தை வழங்கியவர்கள் பேரறிஞர்கள். நீண்ட நாட்கள் ஆலோசித்து நமது தேசத்துக்கு நிரந்தரப் பலன் அளிக்கும் சாசனமாக அதனை வகுத்தார்கள். இந்த அரசியல் சாசனம் ஏதோ சில அடிப்படை உரிமைகளையும் சுதந்திரங்களையும் மக்களுக்கு வழங்க மட்டும் ஏற்பட்டதல்ல. அந்த உரிமைகளையும் சுதந்திரங்களையும் கட்டுப்பாடுகள் இன்றி அரசு வழங்கும்போதும் அவற்றை மக்கள் பொறுப்புணர்ச்சியுடன் முழுமையாகப் பயன்படுத்தும்போதும் நாட்டின் தொழில்வளம் துரிதமாகப் பெருகிப் பொருளாதாரம் செழிக்கக் காண்போம். ஆக நமது அரசியல் சாசனம் மக்களின் உரிமைகளைக் காக்கும்போதே சுபிட்ச வாழ்வுக்கும் வழிவகுக்கிறது. அதில் கைவைக்கு முன் ஒரு முறைக்குப் பல முறை சிந்திக்க வேண்டும்.

இப்படி நாம் கூறுவதால் மாற்றங்களே அவசியமில்லை என்று நாம் கருதுவதாக அர்த்தமில்லை. காலப் போக்கில் மாற்றங்கள் தேவைப்படலாம் என்பதால்தான் அரசியல் சாதனத்தை வகுத்தவர்கள் மாற்றங்களுக்கும் வழிவகுத்தார்கள். அந்த உரிமையைப் பயபக்தியுடன் பயன்படுத்துங்கள் என்றுதான் கோருகிறோம்.

எதிர்க்கட்சியினர் இங்கே பொறுப்புணர்ச்சியுடன் நடந்து கொள்ளவில்லை என்பது பிரதமருக்குப் பெரும் குறை. 'அரசியல் சட்டத்துக்குப் புறம்பான விதத்தில் ஆட்சியைக் கைப்பற்ற முயலக் கூடாது' என்று எச்சரித்திருக்கிறார். இதில் கருத்து மாறுபாட்டுக்கு இடமேயில்லை. ஆனால் எதிர்க் கட்சிகள் என்னதான் முயன்றாலும் ஆட்சிக்கு வரவே முடியாது என்கிற நிலை நீடிப்பதும் ஜனநாயகத்துக்கு நல்லதல்ல. சிறுபான்மை வோட்டுக்கள் பெற்றே ஒரு கட்சி தொடர்ந்து பதவியில் நீடிப்பதும் பண பலம் ஒன்றே தேர்தலில் பிரதான அம்சமாகிவிடுவதும் மாற்றி அமைக்கப்பட வேண்டிய நிலவரங்கள். அத்துடன் எதிர்க்கட்சிகளின் அவசியத்தை உணர்ந்து அவற்றை ஆட்சி மதித்து நடந்து கொள்வதும் ஜனநாயகத்தில்







இன்றியமையாதது. உதாரணமாக, சுபிட்ச மடைந்த சில மேலைநாடுகளில் பிரச்னைகள் ஏதுமில்லாததால் எதிர்க் கட்சிகள் [மக்களிடம் செல்வாக்குப் பெறுவதே கடினமாகி விடுகிறது. அங்கே அரசாங்கமே எதிர்க் கட்சிக்குப் பண உதவி கூடச் செய்து ஆக்கமும் ஊக்கமும் அளிப்பதைக் காண்கிறோம்.

எதிர்க்கட்சிகள் உதிரி நெல்லிக்காய்களாய் இராமல் பொருளாதாரக் கோட்பாடுகளின் அடிப்படையில் ஒருங்கிணைந்தால் ஜனநாயகத்துக்கு நல்லது என்று ராஜாஜி பன்முறை கூறினார்.

ஜாதி மத இன வேற்றுமைகளுக்கு அப்பாற்பட்டுப் பொருளாதார மாற்றுத் திட்டத்தின் அடிப்படையில் எதிர்க்கட்சிகள் இணைந்து செயலாற்றுவதே பாரதத்தில் பாராளுமன்ற ஜனநாயகம் தழைக்க உதவும். இதற்குப் பிரதமரே ஏன் முயற்சி எடுத்துக் கொண்டு வழி வகுக்கக் கூடாது ?

ராஜாஜி சிந்தனை

## பெண்ணின் பெருமை

இந்து மதத்தின் சடங்குகள், இறைவன் உருவத்தை முழுமையாக்கப் பெண்மையும் கண்டிப்பாக அவசியம் என்று வற்புறுத்துகின்றன. எல்லாக் கடவுளருக்கும் பெண்ணொரு பாகம் உண்டு. இறைவியை வழிபடுவது இந்து மதத்தின் முக்கிய அம்சம். அத்வைத தத்துவத்தின் உச்சநிலைகள் ஆதிசங்கரருடன் சம்பந்தப் பட்டவை. ஆனால் ஸ்ரீ சங்கரரைக் காட்டிலும் அம்பாளைப் பல வடிவங்களில் வழிபட்டுப் பக்திப் பரவசமான சுலோகங்களை இயற்றியவர் வேறு யாரும் இல்லை.

இந்து மதத்தின் இந்தப் பழக்கமே இந்துப் பண்பாட்டில் பெண்களின் அந்தஸ்தை வெகுவாக உயர்த்தி விடுகிறது. வெளிப்படையாக நடைமுறையில் பெண்களுக்குப் பணிந்து போகிற பண்பே வகுக்கப்பட்டிருக்கிறது என்பது நிச்சயம் என்றாலும் இந்து சமூகத்தில் இறைவனுடன் இறைவியையும் வழிபடும் பழக்கமானது பெண்களுக்கு முக்கியத்துவத்தையும் மதிப்பையும் தருகிறது.

— நமது பண்பாடு — முன்ஷி நினைவுச் சொற்பொழிவு



# சித்தூர் பற்றிச் சீடர்

"**நா**ன் முதன் முதலாக என் குருநாதரின் கச்சேரி கேட்டது, ஒரு ரூபாய் கொடுத்து நாற்பதாண்டுகளுக்குமுன் மதுரை சித் திரைப் பொருட்காட்சியில்தான். கடம், கஞ்சிரா, பிடில், கொன்னக்கோல், மிருதங் கம், கெத்து — எல்லாப் பக்கவாத்தியங்களுட னும் சித்தூர் திரு சுப்பிரமணிய பிள்ளை அவர்கள் அன்று செய்த கச்சேரியைக் கேட்ட தும், 'நாமும் அவர் மாதிரியே பாடி முன் னுக்கு வரவேண்டும்' என்ற ஆவல் என்னுள் எழுந்தது" என்றார் அவரது புகழ்மிகு சீடர் மதுரை திரு சோமு.

இதன் பிறகு பதினொரு வருடங்கள் அவரது குடும்பத்தில் ஒருவனாகக் குருகுலவாசம் செய்த சோமுவிடம் அந்த நாட்களைப் பற்றிக் கேட்டேன்.

"சுமார் முப்பது சீடர்கள் அவரிடம் பயின்றனர். என் குருநாதர் காஞ்சிபுரம் நயினாப் பிள்ளையிடம் பயின்றவர். அவ ருடைய தாயாரும் நன்றாகப் பாடுவார். குருவுக்கு வெற்றிலை மடித்துக் கொடுப்பது முதல் வீட்டுக்குத் தேவையான மளிகைச் சாமான், கறிகாய் வாங்கி வருவது, எருமை மாடு குளிப்பாட்டுவது — எல்லா வேலைகளையும் பயபக்தியுடன் மனமுவந்து செய்வேன். சிஷ்யர்கள் பாடும்போது ஒரு சிறு குறை இருந்தாலும் பொறுக்கமாட் டார் குருநாதர். ஒருசமயம் 'சுவரகுஜ' என்ற சங்கராபரண ராக கீர்த்தனையை நான் குருவின் முன் பாடிக் காட்டினேன். ஒரு 'சங்கதி' சரியாக வரவில்லை. அம்மிக் குழவியை என் தலையில் தூக்கி வைத்து என்னை வெய்யிலில் நிறுத்தி 'அந்தச் சங்கதி சரியாக வரும்வரை நீ இப்படியே நின்று பாடிப் பழகு' என்று சொல்லி விட்டார்..." என்று சொல்லிச் சிரிக்கிறார், சோமு. "ஆனால் இது போன்ற சந்தர்ப்பங்களில் அவரது கருணை உள்ளம் என்னை ஆசீர்வதிப்பதாகவே எண்ணிக் கொள்வேன். என்னிடமிருந்த அன்பும் அக்கறையும்தானே கடின தண்ட னையை வழங்கியது."

"பிள்ளை அவர்கள் சொந்த சாகித்யங்கள் நிறையச் செய்திருக்கிறார்கள் அல்லவா?"

"மாவல்ல காதம்மா என்ற மாண்டு ராக கீர்த்தனம்; 'மதுரா நகரிலோ' அவர் இயற்றி யதுதான். தெலுங்குதான் அவரது தாய் மொழி. தெலுங்கில் அவர் பெரிய 'ஸ்காலர்' என்றே சொல்ல வேண்டும். தமிழ், சமஸ் கிருதமும் நன்கு தெரிந்தவர். பால்யத்தில் அவர் நிறையக் கதாகாலட்சேபம் செய்திருக் கிறார். நாடகங்களிலும் நடித்திருக்கிறார்."

"உங்கள் குரு நிறைய அபூர்வ ராகங்கள் பாடுவார், இல்லையா?"

"ஆமாம். தீட்சிதரின் 'ஸ்ரீபார்கவி', என்ற மங்கள கைசிக ராக கீர்த்தனை; 'கதலே வாடுகாடு' — நாராயணகௌளை ராக கீர்த்தனை; ருத்ரப்ரியாவில் 'அம்ப பரதேவதே' முதலியவற்றைக் குறிப்பிடலாம்."

"ஒவ்வொரு வித்வானும் சில ராகங்களை, கீர்த்தனங்களை விசேஷச் சிறப்புடன் பாடு வார்களே....?"

"மணிரங்கு, ஜகன்மோகினி, கன்னட பேஹாக் (ஹரிநேனெந்து வெதகுதுரா) கூர்ஜரி (வரானந்து கொம்மனி) பின்ன ஷட்ஜமு (சரிவாரிலோன) — இப்படிப் பலவற் றைக் கூறலாம்.

"கச்சேரிகளில் பக்கவாத்தியக்காரர்களை அரவணைத்துக் கொண்டு போவார். ஒரு கச்சேரியில், யதுகுல காம்போதியில் 'ஹெச் சரிக காரா' கீர்த்தனையில் ஸ்வரம் பாடுகிறார். கொன்னக்கோல் வித்வான் 'சரியான இட'த் துக்கு வந்து சேரவில்லை. அவருக்கு அனு சரணையாக அவர் பாடி, அரவணைத்துப் பின்னர் மற்றப் பக்க வாத்தியக்காரர்களும் சேர்ந்து கொள்ளும் வகையில் சமாளித்ததை என்னால் மறக்க இயலாது."

சென்னை மியூசிக் அகாதெமி, தமிழிசைச் சங்கம் போன்ற பல நிறுவனங்கள் சித்தூர் சுப்பிரமணியபிள்ளை அவர்களுக்கு விருதுகள் வழங்கிக் கௌரவித்துள்ளன. அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தின் கர்நாடக இசைக் கல் லூரியின் தலைவராகவும், சென்னை கர்நாடக இசைக் கல்லூரியின் தலைவராகவும் அவர் சீரிய பணியாற்றியுள்ளார். பிள்ளையவர் களுக்கு இரு பிள்ளைகளும், இந்திரா, ரேவதி என்ற இரு பெண்களும் உள்ளனர். பெண்கள் இருவரும் பாடுவார்கள்.

"உழைப்பாளி அவர். பாராட்டும்போதும் அவருடைய தாராள மனப்பான்மை நன்கு பளிச்சிடும். 'எனக்குத் தமிழிசைச் சங்கத்தில் 'இசைப் பேரறிஞர்' பட்டம் கிடைத்த அன்று என் குருநாதர் ஒரு பெரிய வெள்ளித் தாம் பாளத்தில் ஸ்ரீ வேங்கடாசலபதி — அலர் மேல் மங்கையின் வெள்ளி உருவங்களையும் பொன்னாடை ஒன்றையும் வைத்து மேடைக்கு எடுத்து வந்து, பொன்னாடையை எனக்குப் போர்த்திக் கௌரவித்ததை எண்ணி என் ணிப் பெருமிதமடைகிறேன்" என்று கூறி அமரர் சித்தூர் சுப்ரமணிய பிள்ளைக்குச் சீடர் மதுரை சோமு அஞ்சலி செலுத்தும் போது அவரது மனம் நெகிழ்ந்து உருகுவ தைக் கண்டேன். பேட்டி: '**பாணன்**'

## ஒவ்வொரு நாளும் உங்கள் சருமம் சிறிது ஈரப்பசை - யையும், சிறிது இளமையையும் இழக்கின்றது.



## புதிய ஜான்ஸன்ஸ்* பேபி லோஷன் ஒவ்வொரு நாளும் ஏற்படுகின்ற அந்த இழப்பை ஈடுசெய்கின்றது.

ஒரு பெண்மணியின் விலையில்லாப் பொக்கிஷம் அவளது சருமம். எனினும், வயதாக ஆக, அதை அழகாகவே வைப்பது கடினமாகும். வருங்காலத்தில் உங்கள் சருமத்தை அழகாக வைக்கவேண்டுமானால், அதை இன்று முதலே நன்று பராமரிக்கவேண்டும். ஆகையால்தான் உங்களுக்குத் தேவை புதிய ஜான்ஸன்ஸ் பேபி லோஷன். இந்த விசேஷ அழகு லோஷன் சருமத்திற்கு இன்றியமையாத ஈரப் பசையை நிலை நிறுத்துகிறது.

அதோடு, கடுமையான குளிர் மாதங்களில் உங்கள் சருமத்தை மிருதுவாகவும், இளமையுடனும், அழகொளி வீசும்படியும் வைக்கிறது— ஆண்டு முழுவதும் கூட. எனவே, ஒவ்வொரு காலையிலும் இரவிலும் புதிய ஜான்ஸன்ஸ் பேபி லோஷன் உபயோகியுங்கள். உங்கள் முகம், கழுத்து மற்றும் கைகளில் உபயோகித்து, உங்கள் சருமத்திற்குப் பனிபோன்ற புதுமையைப் அளித்திடுங்கள்.




## புதிய ஜான்ஸன்ஸ் பேபி லோஷன்

## உங்கள் சருமத்தை மிருதுவாக, இளமை தவழ, அழகொளி வீச வைக்கின்றது.

# புராண கைங்கரியம்



ஜகத்குரு
ஸ்ரீகாஞ்சிகாமகோடி
சங்கராசாரிய ஸ்வாமிகள்

1

ஒவ்வொரு ஏகாதசியிலும் ஒவ்வொரு கிராமத்திலும் — அல்லது நகரமானால், அதன் ஒவ்வொரு பேட்டையிலும் — உள்ள எல்லா ஜனங்களையும் ஒரு பொது இடத்தில் ஒன்று சேர்த்து, அங்கே புராணப் பிரவசனம் நடத்த வேண்டும். புராணம் கேட்பதை ''சிரவணம்' என்பார்கள்.

பக்தியில் ஒன்பது தினுசுகள் உண்டு. ''நவவித பக்தி'' என்று இவற்றைப் பிரஹ்லாதன் சொல்வதாக ஸ்ரீமத் பாகவதத்தில் வருகிறது. சிரவணம் (கேட்பது), கீர்த்தனம் (பாடுவது, சொல்வது), ஸ்மரணம் (மனத்துக்குள் நினைப்பது), பாத சேவை, அர்ச்சனை, வந்தனம், தாஸ்யம் (பணிவிடை செய்வது), ஸக்யம் (நட்பு), ஆத்ம நிவேதனம் என்று இந்த ஒன்பதுக்குப் பெயர். கடைசியில் சர்வசங்க பரித் தியாகம் பண்ணி, தனக்கு என்று ஒன்றுமே இல்லை என்று பரிபூர்ண சரணாகதி செய்வது — ஆத்ம நிவேதனம். 'தான்' என்பதே இல்லாதபோது இவன் பரமாத்மாவே ஆகிவிடுகிறான். அதுதான் அத்வைதம். பக்தியின் உச்சியில், ஜீவாத்மா பகவானுக்கு நிவேதனமானபின், பரமாத்மா மட்டும் அத்வைதமாக (ஜீவன் என்கிற இரண்டாம் வஸ்து இல்லாமல்) ஸ்வச்சமாக நிற்கிறது. இதற்கு முந்தி பகவானுக்கு ரொம்ப நெருக்கமாக, பகவானிடம் ரொம்பவும் ஸ்வாதீனமாக ஒரு சிநேகிதன் மாதிரி இருக்கப்பட்ட நிலை. அதுதான் ஸக்யம்: பகவானை ஒரு சகா மாதிரி வைத்துக் கொள்வது. இதற்கும் முன்னாடி பகவான் சர்வ லோகங்களையும் ஆட்டிப் படைத்து நடத்தி வைக்கிறவன், நாம் அற்ப சக்தர்கள் என்று அவன் முன் துரும்பு மாதிரி அடிமையாகக் கிடக்கிற நிலை. 'தாஸ்யம்' என்பது இதுதான்.

சைவ சமயாச்சாரியர்களான நால்வரில் அப்பர் தாஸ்யம், சுந்தரர் ஸக்யம், மாணிக்கவாசகர் ஆத்ம நிவேதனம் என்று சொல்வார்கள். தாஸ்யம் என்பதைத் தாச மார்க்கம் என்றும், சக்யம் என்பதை சக மார்க்கம் என்றும், ஆத்ம நிவேதனம் என்பதை சன்மார்க்கம் என்றும் சொல்வார்கள். நால்வரில் இன்னொருத்தர் — ஞானசம்பந்தர் — பாக்கி இருக்கிறாரே, அவர் எந்த மார்க்கம் என்றால், 'சத் புத்ர மார்க்கம்' என்று சொல்வார்கள். தகப்பனாரிடம் பிள்ளை இருக்கிற மாதிரி பகவானிடம் பழகுகிறதுதான் சத்புத்ர மார்க்கம். அதிலே தாஸ்யத்திலே இருக்கிற பய பக்தி, மரியாதை, ஸக்யத்தில் இருக்கிற ஸ்வாதீனம் இரண்டும் இருக்கின்றன. அதோடு தகப்பனார் — பிள்ளை என்கிற பரம ப்ரீதி. வேதத்திலேயே சொன்னபடி பிதாவேதான் புத்திரனாக வருகிறான் என்பதால் இதிலே அத்வைதமும் (ஆத்ம நிவேதனத்தின் பலனும்) கலந்திருக்கிறது. சாக்ஷாத் சுப்பிரமண்யத்தின் அவதாரமான ஞான சம்பந்தர் இப்படி சகலரோடு தினுசு தினுசாகக் கலந்து சத்புத்ர மார்க்கத்துக்கு எடுத்துக்காட்டாக இருக்கிறார். அப்பர் சுவாமிகள், அறிவு அநுபவம் எல்லாவற்றிலும் மகா பெரியவராக இருந்தாலும் ரொம்பவும் அடங்கி, பரம எளிமையோடு பரமேச்வரனை நெக்குருகிப் பாடிக் கொண்டிருந்தவர். உழவாரப் படை வைத்துக் கொண்டு புண்ணிய க்ஷேத்திரங்களில் புல்லைச் செதுக்கிப் பாதையைச் சரி செய்து கொண்டு தாஸ மார்க்கத்துக்கு ஓர் உருவமாக (Personification ஆக) இருந்தார். சுந்தரருக்கோ ஸ்வாமியிடம் ரொம்ப ஸ்வாதீனம். திருவாரூரில் பரவை வீட்டுக்கு ஸ்வாமியைத் தூதுகூட அனுப்பியவர் அவர்! மாணிக்கவாசகர் பரம ஞானி. 'சிவமாக்கி எனையாண்ட' என்று அப்படியே பரமாத்மாவுடன் தம்மை இரண்டறக் குழைத்துக் கொண்டவர் அவர்.

பரம பாகவதனான பிரஹ்லாதனைப் பற்றிய பேச்சிலிருந்து சைவ சமயாசாரியர்களின் சமாசாரத்துக்கு வந்துவிட்டேன். நவவித பக்தியைச் சொல்ல வந்தேன். அதிலே ஸத் புத்திர மார்க்கம் என்று ஒன்றைச் சொல்லாவிட்டாலும் பிரஹ்லாதனே பெருமாளுக்கு ஒரு குழந்தை மாதிரி — ஸத் புத்திரன் மாதிரி—தான் இருந்தான். அவன் சொன்ன ஒன்பதில் முதலாவது, பகவான் பெயரை, பகவான் புகழைக் கேட்பது; சிரவணம். அடுத்தது கீர்த்தனம். கீர்த்தனம் என்றால் பகவான் மகிமையைப் பாடுவது. அல்லது நாம சங்கீர்த்தனம் செய்வது. பஜனை சம்பிரதாயம் இதில் வந்ததுதான். இந்தக் கலிகாலத்துக்கு இதுதான் பிரத்தியேக சாதனை என்று சொல்வார்கள்.

(தொடரும்)

**[1932ம் வருஷத்திலிருந்து பெரியவர்கள் வழங்கிய உரைகள் ஸ்ரீமுகங்கள், கட்டுரைகளிலிருந்து தொகுத்தது.]**

பாரத அரசின் அடிஷனல் ஸொலிஸிட்டர் ஜெனரலாக நியமனம் பெற்றுள்ள பிரபல வழக்குரைஞர் திரு வி. பி. ராமனை 'வாயிட்ஸ் கார்னர்' என்று புகழ் பெற்றுள்ள அவரது இல்லத்தில் சந்திக்கிறேன்.

கல்கி சார்பில் பாராட்டுக் கூறிவிட்டு. ''இப்புதிய பதவியோடு இணைந்த பணிகள், கடமைகள் யாவை?'' என்று விசாரிக்கிறேன்.

திரு ராமன் விளக்குகிறார்: ''அட்டர்னி ஜெனரல், ஸொலிஸிட்டர் ஜெனரல், இணை (Additional) ஸொலிஸிட்டர் ஜெனரல் ஆகிய மூவர் அடங்கியது. மத்திய அரசின் சட்டக் குடும்பம். சர்க்காரின் சட்ட ஆலோசகராக நான் பணியாற்ற வேண்டும். அட்டர்னி ஜெனரல் இந்தச் சட்டக் குடும்பத்தில் மூத்தவர்.''

'Misnomer' (பணிக்குப் பொருத்தமில்லாத பெயர்) இங்கிலாந்தில் கூட இப்பதவி வகிப்பவர் அரசின் சட்ட அதிகாரிதான். மத்திய அரசின் சட்ட ஆலோசகர் எனக் கூறுவதே பொருந்தும்.''

சீனியர் கேம்பிரிட்ஜ் பரீட்சையில் தேர்வு பெற்று, லயோலா கல்லூரியில் சேர்ந்து பௌதிகத்தில் பி. எஸ்ஸி. பட்டம் பெற்ற திரு. வி. பி. ராமன் சட்டக் கல்லூரியில் சேர்ந்தார். இறுதித் தேர்வில் மாநிலத்திலேயே (ஆந்திரம் பிரிவதற்கு முன்) முதல்வராகத் தேர்வு பெற்று ஐந்து பதக்கங்களை வாங்கினார். இன்றளவும் எந்த ஒரு மாணவரும் ஐந்து பதக்கங்களையும் வாங்கி திரு. ராமனின் 'ரெக்கார்ட்'டை வீழ்த்தவில்லை என்பது குறிப்பிடத் தக்கது.

உழைப்பு

# அரசின் சட்டக் குடும்பத்தில் இளையவர்



'ஸொலிஸிட்டர்' என்றால் நீதிமன்றத்தில் வழக்குரைக்கும் அட்வோகேட்டுக்கு வழக்குகளைப் பெற்றுத் தருபவரல்லவா?

''பம்பாய், கல்கத்தா இரு நகரங்களில் மட்டுமே 'ஸொலிஸிட்டர்'கள் உள்ளனர். சென்னை நகரில் அப்படி யாரும் இல்லை. 'ஸொலிஸிட்டர்' என்பவர் சட்டக் கல்வி பயின்று பட்டம் பெற்றிருப்பவரே எனினும் நேரிடையாக நீதிமன்றத்தில் வழக்குரைக்க முடியாது. எனவே, கட்சிக்காரர்களிடம் அவர் பேசி, வழக்கு பற்றிய விவரங்களைக் கேட்டறிந்து உரிய வழக்குரைஞரிடம்வழக்கை ஒப்படைப்பார். கட்சிக்காரரிடம் பணம் வாங்குவதுகூட ஸொலிஸிட்டரே செய்துவிடுவது வழக்கம். ஆனால் மத்திய அரசின் ஸொலிஸிட்டர் ஜெனரலுக்கு அத்தகைய பணி ஏதுமில்லை. 'ஸொலிஸிட்டர் ஜெனரல்' என்ற பெயர் இருக்கிறதே அது ஒரு

''அட்வொகேட் ஜெனரலாகப் புகழ் பெற்ற திரு வி. கே. திருவேங்கடாச்சாரியாரிடம் இரு வருடங்கள் ஜூனியராகப் பயிற்சி பெற்றேன். 1964-ல் 'பப்ளிக் ப்ராஸிக்யூட்டர்'ராகப் பதவி ஏற்றேன். மூன்றாண்டுகளுக்குப் பிறகு திராவிட முன்னேற்றக் கழகம் அமைச்சரவை அமைத்ததும் நான் அப்பதவியை ராஜினாமா செய்து விட்டேன்.''

''ஏன்?''

''அட்வொகேட் ஜெனரலாக விருந்த மோகன் குமாரமங்கலம் பதவி விலகினார். நானும் பதவி விலகிக் கொண்டேன்.''

''அதன் பிறகு 'பிரைவேட் பிராக்டீஸ்' தொடங்கினீர்களா?''

''ஆமாம். 1974 வரையில். தொழில் திருப்திகரமாக இருந்தது. 1973-ம் ஆண்டு நான் 'சீனியர் அட்வோகேட்' ஆனேன்...''

''மற்ற சாதாரண அட்வகேட்டுக்கும் சீனியர் அட்வொகேட்டுக்கும் என்ன வித்தியாசம்?''

''சீனியர் அட்வோகேட் என்பவர் கட்சிக்காரர்களிடம் நேரிடையாகத் தொடர்பு கொண்டு வழக்குகளைப் பெறக் கூடாது. வழக்கின் சுருக்கம் (Brief) மட்டுமே ஜூனியர் வக்கீலின் மூலம் பெறலாம். சென்னையில் இம்மாதிரி ஏழு, எட்டு சீனியர் அட்வோகேட்டுகள் உள்ளனர். பாரதம் முழுவதுமாகச் சுமார் நூறு பேர் இருக்கக் கூடும். சீனியர் அட்வொகேட்டுக்கு உடையில் கூட வேறுபாடு உண்டு. ஜட்ஜ் அணிகிற மாதிரி அதே கவுன் அணிந்து கொள்ளும் பெருமை சீனியர் அட்வொகேட்டுக்குஉண்டு.''

திரு வி. பி. ராமன் பிரபல வழக்குகள் பலவற்றில் ஆஜராகியுள்ளார். கடத்தல் மன்னன் வாக்காட் மீது இவர் பிராசிக்யூஷன் நடவடிக்கை எடுத்தது நினைவிருக்கும். 1971-ல் கவர்னர் தமிழ்நாடு சட்டசபையை ஒத்தி வைத்தபோது திரு. மதியழகன் சார்பில் ஆஜராகி இவர் வழக்காடினார். வழக்கில் இவர் தோல்வியுற்றாலும், வழக்கு பிரபலமானது. திரு. பக்தவத்சலம், திரு பிரும்மானந்த ரெட்டி, திரு நெடுஞ்செழியன் ஆகியோர் சார்பில் தேர்தல் வழக்குகளில் ஆஜராகி வாதாடியுள்ளார்.

''உங்கள் தந்தையாருக்கும் அமரர் ராஜாஜிக்கும் நெருங்கிய தொடர்பு இருந்ததல்லவா? அவர்களது நட்பு எப்போது ஏற்பட்டது?'' என்று கேட்கிறேன்.

''என் தந்தையார் பொதுப்பணித்துறையில் பொறி இயல் அதிகாரியாக இருந்தவர். தந்தையார் சேலத்தில் முனிசிபல் எஞ்சினியராகப் பணியாற்றியபொழுது ராஜாஜி சேலம் நகரசபைத் தலைவராக (முனிசிபல் சேர்மன்) இருந்தார். அப்போது அவர்களிடையே ஏற்பட்ட தொடர்பு நெருங்கிய நட்பாகப் பரிணமித்து வளர்ந்தது. ராஜாஜி அரசியல் பெருந் தலைவர்களுள் ஒருவர். என் தந்தையார் அரசாங்க அதிகாரி. ராஜாஜியுடன் அவருக்கு இருந்த நட்பின் காரணமாகப் பின்னர் உத்தியோகத் துறையில் என் தந்தைக்குச் சில சங்கடங்கள் ஏற்பட்டன. ஆனால் என் தந்தையார் அவற்றைப் பொருட்படுத்தவில்லை. ராஜாஜியிடம் அவருக்கு அத்தனை மதிப்பு. என்னைச் சிறு குழந்தை முதலே ராஜாஜி நன்கு அறிந்தவர். 1958ல் என் தகப்பனார் காலமானார். இந்த வீடு பல அரசியல் தலைவர்கள் அடிக்கடி சந்தித்து உரையாடும் இடமாகப் புகழ் பெற்றுள்ளது.''

திரு வி. பி. ராமனுக்குக் கர்நாடக சங்கீதத்தில் ஈடுபாடு மிகுதியாக உண்டு. அவர் நன்றாக வயலின் வாசிப்பார்.

இவரது மனைவி மகாகனம் வி. எஸ். சீனிவாஸ சாஸ்திரியாரின் பேத்தி. அவருக்கும் கர்நாடக இசையில் நல்ல தேர்ச்சியுண்டு.

சட்டத்தைப் பற்றி வி. பி. ராமனின் பொதுவான கருத்து: ''சமுதாய அபிவிருத்திக்குச் சட்டம் ஒரு கருவியாக இருக்க வேண்டுமே அல்லாது தடையாக இருக்கக் கூடாது. சட்டத்துக்கும் நியாயத்துக்கும் முரண்பாடு இருக்கக் கூடாது. நியாயத்தை ஒட்டியே சட்டம் அமைய வேண்டும். சட்டம் சில பணக்காரர்களின் கையிலுள்ள கருவியாக இருத்தல் விரும்பத் தக்கதன்று. பாமர மக்களின் எண்ணங்களுடன் சட்டம் இணைந்து இயங்க வேண்டும். இன்றுள்ள சில முரண்பாடுகள் நாளடைவில் மறைந்து விடும் என்பது உறுதி.''

தமிழில் தங்கு தடையின்றிச் சரளமாக உரையாடும் ஆற்றல் உள்ளவர் திரு வி. பி. ராமன் என்பது குறிப்பிடத்தக்கது.

பேட்டி: **பாணன்**

மேலட்டை: ஸ்ரீமதி வி.பி.ராமனும் கணவரும்.

வண்ணப்படம்: **உத்ரா**



# வைட்டமின் பற்றுக்குறையினால் ஏற்படும் களைப்பையும் சோர்வையும் எதிர்க்க:



**டாக்டர்கள் சிபாரிசு செய்யும் வைட்டமின்களும் தாதுப்பொருள்களும் ரோஷ் விடாமினெட்ஸ் ஃபோர்டேயில் அடங்கியுள்ளன.**

இன்றைய வாழ்க்கை முன்போல் அல்ல. அவசியமான உணவுபதார்த்தங்களின் விலை ஆகாயத்தை எட்டிப்பிடிக்கின்றது. கிடைக்கும் பொருள்களோ, ஊட்டச்சத்துடனும், தளதளவென்று புதுமையாகவும் இருப்பதில்லை. காலை பலகாரம், மற்றும் மதிய உணவு வெகு அவசரமாகச் சாப்பிடப்படுவதுடன், அவற்றன் ஊட்டச்சக்தியும் முழுமையாக இருப்பதில்லை. அத்துடன், இந்த ஊட்டப்பற்றுக்குறை அலுவலகத்திலும், வீட்டிலும், தொழிற்சாலையிலும் உள்ள வேலை நெருக்கடியினால் ஏற்படும் களைப்பிற்கும், சோர்விற்கும் நம்மை உள்ளாக்குகிறது.

இந்த வைட்டமின் பற்றுக்குறையை எதிர்ப்பதில் முக்கியப் பங்கு வகிக்கிறது ரோஷ் விடாமினெட்ஸ் ஃபோர்டே—சமமான ஆகாரத்திற்கு அத்தியாவசியமான 11 வைட்டமின்கள் மற்றும் 5 தாதுப்பொருள்களின் சாரம்.
தினமும் காலையில் ஒரு ரோஷ் விடாமினெட்ஸ் ஃபோர்டே உட்கொள்ளுங்கள். களைப்பை எதிர்க்க ஒரு கவசம் போன்றது இது.

**ரோஷ்**

# விடாமினெட்ஸ் ஃபோர்டே

"டானிக் மாத்திரை"



ஒரு ரோஷ் விடாமினெட்ஸ் ஃபோர்டே காலைதோறும் உங்களுக்கு 20 பைசாவுக்கும்* குறைவிலே!

* உள்ளூர் வரிகள் தனி

RP-8976

# ஒரு பிடி அவலம்!



★ கோவா பிரதமர் ஸ்ரீமதி சசிகலா காகோட்கர், சமீபத்தில் (அக்-23) பெங்களூரில் பெண்கள் கூட்டத்தில் பேசுகையில், ''பழைய பத்தாம் பசலி தார்மீகக் கொள்கைகளைத் தூக்கி எறிய வேண்டும். குடும்பத்தையும் குழந்தைகளையும் பராமரிப்பது பெண்களின் கடமை என்ற பழங்காலக் கருத்தைக் கைவிட வேண்டும்!'' என்று கூறியிருக்கிறார்.

அதனைக் கடமையாக அல்ல, உரிமையாகவே பாரதப் பெண்கள் பலர் எண்ணுகிறார்கள் என்பதை ஸ்ரீமதி சசிகலா உணர்வாரா?

★ சென்ற ஐந்து ஆண்டுகளாக பிரான்ஸில் 620,000 டன் பழங்களும் காய்கறிகளும் குப்பையிலோ அல்லது கடலிலோ எறியப்பட்டனவாம். அதிக உணவு 'உற்பத்தியால் பிரான்ஸ் அவதிப்படுகிறதாம். விலைவாசி குறைந்து போவதைத் தடுப்பதற்காக பிரான்ஸ் இப்படிச் செய்கிறது. அதே சமயம் இந்தியாவில் தக்க பாதுகாப்பின்றி சிறிதளவு உணவுப் பொருள் வீணானாலும் பலத்த கண்டனம் எழுகிறது. இது விசித்திர நிலையாகத் தோன்றலாம். ஆனால் முன்னேற்றமடைந்த நாடுகள் அதிகப்படி பண்டங்களையெல்லாம் பற்றாக்குறை நாடுகளுக்கு இலவசமாய் அனுப்பி விடுவது பிரச்னையைத் தீர்க்காது. ஏனெனில் அப்போது அபிவிருத்தி அடைந்து வரும் நாட்டு மக்கள் சோம்பி விடுவார்கள். முன்னேற்றப் பாதையில் முனைந்து நடக்க மாட்டார்கள்.

★ டெல்லி பஸ் போக்குவரத்துக் கழகம் (டி.டி.சி.) இந்த ஆண்டு இறுதிக்குள் 100 பெண் பஸ் கண்டக்டர்களை நியமிக்கப் போகிறதாம்! இனி கண்டக்டர் ஊதும் விசில் சத்தம் இனிமையாக இருக்கலாம்.

★ குஜராத் மாநிலத்தில் ராஜகோட் மாநகராட்சிக்கு நடைபெற்ற தேர்தலில் மொத்தமுள்ள 51 இடங்களில் 39 இடங்களை ஜனதா முன்னணி பெற்றுள்ளது!



'' வம்பன் ''

ஒன்று பட்டால் உண்டு வாழ்வு என்று எதிர்கட்சிகளுக்கு ராஜாஜி எடுத்துச் சொன்னாரல்லவா?

★ மாக்ஸ்முல்லர் பவனத்தில் நடைபெற்ற ''நேருக்கு நேர்'' என்ற நிகழ்ச்சியில் டைரக்டர் கே. பாலசந்தர், ரசிகர்களின் பல கேள்விகளுக்குச் சுவையான பதில்களை அளித்தார்.

'' 'புன்னகை' படத்தில், உண்மையை வற்புறுத்தும், காந்தியத்தை வற்புறுத்தும் கதாநாயகன் இறந்து விடுவதாகக் காட்டுவதிலிருந்து பாலசந்தருக்கே 'உண்மை வெல்லும்' என்னும் கொள்கையில் நம்பிக்கையில்லையோ என்று தோன்றுகிறது'' என்று ஒரு ரசிகர் குறிப்பிட்டார்.

''இலக்கிய மரபையொட்டி அப்படி எடுத்தேன்'' என்றார் பாலசந்தர்.

ஆம், உண்மையை நிலைநாட்ட, பொய் சொல்ல இயலாமல் தசரதன் இறந்தான். 'தன் மெய்யை நிற்பதாக்கி இறந்தான்' என்கிறார் கம்பர்.

''உன்னை நீ அறி'' என்று போதித்த ஸோக்ரதரின் உண்மையைத் தாங்க முடியாமல் ஆதென்ஸ் மக்கள் அவருக்கு விஷம் கொடுத்தனர். ஸோக்ரதர் உடல் மறைந்தது எனினும் அவர் கருத்துக்கள் இன்றும் நிற்கின்றன.

இந்து முஸ்லிம் ஒற்றுமைக்காக காந்தி மகான் பரிந்து பேசியதைத் தாங்க முடியாமல் அவரை ஒருவன் சுட்டுக் கொன்றான். காந்தி மகானின் பூத உடல் மறைந்தது. ஆனால் அந்தக் கணத்திலிருந்து இந்து முஸ்லிம் துவேஷம் மறைந்தது. பரஸ்பரக் கொலைகள் நின்றன. அமைதி ஏற்பட்டது. காந்தி மகானின் கருத்து வென்றது.

★ பாரதம் சுதந்திரம் பெற்றதிலிருந்து இன்றுவரை (1974—75) நாம் வெளிநாடுகளிலிருந்து பல வகைகளிலும் பெற்ற கடனுதவியின் மொத்தத் தொகை ரூ. 13,056 கோடியாகும். இதற்கு வட்டியாக மட்டும் ஆண்டுக்கு 596 கோடி ரூபாய் செலுத்த வேண்டியிருக்கிறது. நடப்பு ஆண்டுக்கு இது 601 கோடி ரூபாயாக உயரலாம் என்று மதிப்பிட்டிருக்கிறார்கள். தேசம் கடன்பட்டிருக்கிறது என்றால் நாம் ஒவ்வொருவரும் கடன்பட்டிருப்பதாக அர்த்தம்.

★ சீன அதிபர் மாவோ துங் உடல்நிலை கவலைக்கிடம் என்று பல செய்திகள் வந்தன. அத்துடன் அவர் ஆங்கிலம் கற்கத் தொடங்கியிருக்கிறார் என்றும் ஒரு செய்தி! இவை அவரது உழைப்பார்வத்தையும், ஆங்கிலத்தின் முக்கியத்துவத்தையும் உணர்த்தும் செய்திகள்.

## நாற்பத்தோராம் அத்தியாயம்

# "இதோ உன் காதலன்"

**ந**ல்ல சமயத்தில் வந்து சிவகாமியின் உயிரைக் காப்பாற்றியவர் புலிகேசி சக்கரவர்த்தி அல்ல — 'புலிகேசி வேஷம் பூண்ட நாகநந்தி அடிகள் என்பது நேயர்கள் அறிந்த விஷயமே.

வாசலில் நின்ற கோபங் கொண்ட கூட்டத்தைப் பார்த்துவிட்டுச் சிவகாமி கதவை அடைத்துக் கொண்டு உள்ளே சென்ற அடுத்த நிமிஷமே குதிரைகள் விரைந்து வரும் சத்தம் கேட்டது. வருகிறவர்கள் பல்லவ வீரர்கள்தான் என்று நினைத்துக் கொண்டு ஜனக் கூட்டத்தில் பெரும்பாலோர் ஓட்டம் பிடித்தார்கள். எஞ்சி நின்ற ஜனங்களும் வீட்டைக் காவல் புரிந்த சளுக்க வீரர்களும் வருகிறவர் புலிகேசிச் சக்கரவர்த்தி என்பதைக் கண்டதும் வியப்பினால் ஸ்தம்பித்து நின்றார்கள். நர்மதையிலிருந்து துங்கபத்திரை வரையில் பரவிக் கிடந்த மகத்தான சாம்ராஜ்யத்தைப் பத்து நாளைக்கு முன்பு வரையில் ஏக சக்ராதிபதியாக இணையற்ற மகிமையுடன் ஆட்சி செலுத்திய தங்களுடைய மன்னருக்கு இவ்வளவு சீக்கிரத்தில் இத்தனை பெரிய துர்க்கதி நேர்ந்ததை எண்ணி வாதாபி மக்கள் கலங்கிப் போயிருந்தார்கள். சக்கரவர்த்தியைப் பார்த்ததும் அங்கு எஞ்சி நின்ற ஜனங்கள் 'ஓ' வென்று கதறிப் புலம்பத் தொடங்கினார்கள். அதைப் பார்த்த சக்கரவர்த்தி தம் அருகில் நின்ற வீரனிடம் ஏதோ சொல்ல, அவன் கையமர்த்திக் கூட்டத்தில் அமைதியை உண்டாக்கிய பிறகு உரத்த குரலில் கூறினான்: ''மகாஜனங்களே! இந்த ஆபத்துக்காலத்தில் நீங்கள் எல்லாரும் காட்டும் இராஜ விசுவாசத்தைக் கண்டு சக்கரவர்த்தி ஆறுதல் பெற்று தங்களுக்கெல்லாம் நன்றி



செலுத்துகிறார். எதிர்பாராத வஞ்சகச் செயலினால் இத்தகைய துரதிர்ஷ்டம் நமக்கு நேர்ந்துவிட்டது. இதற்கெல்லாம் தக்க சமயத்தில் பழி வாங்கியே தீர்வது என்று சக்கரவர்த்தி உறுதி கொண்டிருக்கிறார். இந்த வீட்டில் உள்ள பல்லவ நாட்டு மங்கை வாதாபிக்கு நேர்ந்த விபரீதத்துக்கு ஒரு காரணம் என்பதை அறிந்து அவளைத் தக்கபடி தண்டிப்பதற்காகவே இங்கு வந்திருக்கிறார். அந்த வேலையை அவருக்கு விட்டுவிட்டு நீங்கள் எல்லோரும் அவரவர்கள் உயிர் பிழைப்பதற்குரிய மார்க்கத்தைத் தேடும்படி கேட்டுக் கொள்கிறார். ஈவு இரக்கமற்ற பல்லவ அரக்கர்கள் அதர்ம யுத்தத்தில் இறங்கி உங்கள் வீடுகளைக் கொளுத்துகிறார்கள். அவரவர்களுடைய பெண்டு பிள்ளைகளையும் உடைமைகளையும் கூடியவரையில் காப்பாற்றிக் கொள்ள முயலுங்கள். உடனே அவரவர்களுடைய வீட்டுக்குப் போங்கள்!''

இதைக் கேட்டதும் ஜனங்கள் இன்னும் உரத்த சத்தத்தில் அழுது கொண்டும் புலம்பிக் கொண்டும் சாபமிட்டுக் கொண்டும் அங்கிருந்து கலைந்து போகத் தொடங்கினார்கள்.

பிறகு, சக்கரவர்த்தி அந்த வீட்டு வாசலில் காவல் புரிந்தவர்களைப் பார்த்து, ''உங்களுடைய கடமையை நன்றாக நிறைவேற்றினீர்கள். மிகவும் சந்தோஷம். இனிமேல் நீங்கள் உங்கள் உயிரைக் காப்பாற்றிக் கொள்ளப் பாருங்கள். உயிர் தப்பியவர்கள் எல்லோரும் . நாசிகாபுரிக்கு வந்து சேருங்கள்! அங்கு நான் கூடிய சீக்கிரத்தில் வந்து உங்களைச் சந்திக்கிறேன்!'' என்றதும், அந்த வீரர்கள் கண்ணில் நீர் ததும்பச் சக்கரவர்த்திக்கு வணக்கம் செலுத்தி விட்டு அவ்விடமிருந்து சென்றார்கள். பிறகு சக்கரவர்த்தி தம்முடன் வந்த குதிரை வீரர்களின் தலைவனைப் பார்த்து, ''தனஞ்செயா! நான் சொன்னதெல்லாம் நினைவிருக்கிற



தல்லவா?'' என்று கேட்க, ''ஆம், பிரபு! நினைவிருக்கிறது'' என்றான் தனஞ்செயன்.

''இன்னொரு தடவை சொல்லு கிறேன். இங்கிருந்து உடனே செல் லுங்கள். 'மாமல்லச் சக்கரவர்த்திக்கு ஜே!' என்று கோஷம் போட்டுக் கொண்டு நகரைவிட்டு வெளியேறுங்கள். காபாலிகர் பலிபீடத்துக்கு அருகில் உள்ள காட்டுக்கு வந்து சேருங்கள். உங்களுக்கு முன்னால் நான் அங்கு வந்து சேர்ந்துவிடுவேன்!'' என்று கூறிவிட்டு மறுபடியும் அந்த வீரன் காதோடு, ''பலிபீடத்துக்கு அருகிலுள்ள குகை யில் பைத்தியம் கொண்ட காபாலிகை ஒருத்தி இருப்பாள். தாட்சண்யம் பாராமல் அவளைக் கொன்றுவிடு!'' என்றார் சக்கரவர்த்தி.

தனஞ்செயனும் மற்ற வீரர்களும் அங்கிருந்து மறுகணமே புறப்பட்டுச் சென்று மறைந்தார்கள்.

பிறகு அந்த வீதி சூனியமாகக் காட்சி அளித்தது.

* * *

புலிகேசி வேஷம் தரித்த நாகநந்தி, சிவகாமியின் வீட்டுக் கதவண்டை வந்து மெதுவாகத் தட்டிப் பார்த்தார். பிறகு திட்டி வாசல் கதவைத் தொட் டுத் தள்ளியதும் அது திறந்து கொண் டது. உடனே அதன் வழியாக உள்ளே சென்று கதவைத் தாழிட்டார்.

வீட்டில் முன்கட்டை நன்றாய்ப் பார்த்துவிட்டு அங்கு யாரும் இல்லை யென்று தெரிந்துகொண்டு பின்கட்டை அடைந்தார். கத்தி ஓங்கிய காபாலிகை யின் கையைக் கெட்டியாகப் பிடித்துச் சிவகாமியின் உயிரைத் தக்க சமயத்தில் காப்பாற்றினார்.

''அட பாவி, வந்து விட் டாயா?'' என்று காபாலிகை சொன்னதும், புத்த பிக்ஷு



அவளைத் தமது காந்தக் கண்களால் உற்றுப் பார்த்து, ''ரஞ்சனி! சற்று இங்கே வா!'' என்று கூறி விட்டு அப்பால் சென்றார். அந்த மூர்க்க ராட்சஸி அவருடைய கட்டளைக்குக் கீழ்ப் படிந்து அவர் பின்னோடு சென்றது சிவகாமிக்கு மிக்க வியப்பை அளித்தது.

பிக்ஷு ரஞ்சனியை ஒரு தூணின் மறைவுக்கு அழைத்துக் கொண்டு போனார். சிவகாமியின் காதில் விழாத குரலில், ''ரஞ்சனி! இது என்ன காரியம் செய்தாய்?'' என்றார்.

''பிக்ஷு! தவறு ஒன்றும் நான் செய்யவில்லையே? நகரம் எரிவதைக் கண்டதும் தங்களைப் பற்றிக் கவலை ஏற்பட்டது. தங்களைத் தப்புவித்து அழைத்துப் போவதற்காக வந்தேன்!''

''அப்படியா? ரொம்ப சந்தோஷம். ஆனால், அந்தப் பல்லவ நாட்டுப் பெண்ணை எதற்காகக் கொல்லப் போனாய்?''



''அதுவும் தங்களைத் தப்புவிப்பதற்காகத்தான். அவளால் தங்களுக்கு அபாயம் நேராது என்பது என்ன நிச்சயம்? அவள் விரோதி நாட்டுப் பெண்தானே?''

''மூடமே! அவளால் எனக்கு என்ன அபாயம் நேர்ந்துவிடும்?''

''பிக்ஷு! காதல் என்கிற அபாயம் மற்ற அபாயங்களைவிட மிகப் பொல்லாதது அல்லவா?'' என்றாள் காபாலிகை.

''உன் மூடத்தனம் இன்னும் உன்னைவிட்டுப் போகவில்லை. நீ இருக்கும் போது நான் இன்னொரு பெண்ணை....''

''அப்படியானால் அவளைப் பற்றி ஏன் இவ்வளவு கவலை உங்களுக்கு? அவளை நான் கொன்று பழி தீர்த்துக் கொண்டால் உங்களுக்கு என்ன?''

''அசடே! சிவகாமியைப் பழி வாங்குவதற்கு உனக்கு என்ன காரணம் இருக்கிறது? எனக்கல்லவா இருக்கிறது? பல்லவன் பேரில் என்னுடைய பெரும் பழியைத் தீர்த்துக் கொள்வதற்காகவே அவளை நான் பத்திரமாய்ப் பாதுகாத்து வருகிறேன் என்று எத்தனை தடவை உனக்குச் சொல்லியிருக்கிறேன்?''

''பிக்ஷு! இப்போது ஒன்றும் மோசம் போய்விடவில்லையே!''

''மோசம் போய்விடவில்லை. ஒரு விதத்தில் நீ இங்கு அவசரமாய்ப் புறப்பட்டு வந்ததே நல்லதாய்ப் போயிற்று. ரஞ்சனி! நீ எனக்கு இச்சமயம் உதவி செய்ய வேண்டும். இப்போது நான் சொல்கிறதைக் கேட்டால், அப்புறம் ஆயுள் முழுதும் உன் இஷ்டப்படி நான் நடப்பேன்......!''

''பிக்ஷு! இது சத்தியமா?''

''எத்தனை தடவை உனக்குச் சத்தியம் செய்து கொடுப்பது? இப்போது சத்தியம் செய்துவிட்டு அப்புறம் அதை மீறி நடந்தால் என்ன செய்வாய்?''

''என்ன செய்வதென்று எனக்குத் தெரியும்.''

''அதைச் செய்துகொள். இப்போது நான் சொல்கிறபடி செய்!''

''சொல்லுங்கள், அடிகளே!''

பிக்ஷு தன் குரலை இன்னும் தாழ்த்திக் கொண்டு காபாலிகையிடம் அவள் செய்ய வேண்டிய காரியத்தைப் பற்றிச் சொன்னார்.

''நன்றாகத் தெரிந்து கொண்டாயல்லவா? அந்தப்படி செய்வாயா?'' என்று கேட்டார்.

''கட்டாயம் செய்கிறேன்!'' என்றாள் காபாலிகை. பிறகு, கோரப் புன்னகையுடன், ''பிக்ஷு! தாங்கள் தங்களுடைய பழியைத் தீர்த்துக் கொண்ட பிறகு நான் என் பழியைத் தீர்த்துக் கொள்ளலாம் அல்லவா?'' என்றாள்.

பிக்ஷுவின் முகம் சுருங்கிற்று. ''ஆ! உன் சந்தேகம் உன்னைவிட்டு அகலாது போல் இருக்கிறது. எத்தனை தடவை 'ஆகட்டும்' என்று சொல்லியிருக்கிறேன்! போ, சீக்கிரம்! அதோ ரதமும் குதிரைகளும் வரும் சத்தம் கேட்கிறது!'' என்றார்.

காபாலிகை அந்த வீட்டின் முன் கட்டில் பிரவேசித்து வாசல் கதவின் சமீபம் வந்தாள். இட்டி வாசற் கதவின் தாழைத் திறந்து விட்டுப் பக்கத்தில் ஒதுங்கி நின்றாள். கத்தி பிடித்த அவளுடைய வலது கையை முதுகின் பின்னால் மறைத்து வைத்துக் கொண்டு, அபாயத்தை எதிர்பாராத ஆட்டின் மேல் பாய யத்தனிக்கும் பெண் புலியைப் போலக் காத்திருந்தாள். அந்தப்

பெண் பேயின் முகத்திலும் கண்களிலும் கொலை வெறி கூத்தாடிற்று.

* * *

காபாலிகையை வாசற் பக்கத்துக்கு அனுப்பிவிட்டு நாகநந்தி பிக்ஷு சிவகாமியின் அருகில் வந்தார்.

''சிவகாமி! இன்னமும் என் பேரில் சந்தேகம் தீரவில்லையா? இன்னமும் என்னிடம் நம்பிக்கை இல்லையா?'' என்று கூறிய பிக்ஷுவின் கனிந்த குரல் சிவகாமிக்கு மனக் குழப்பத்தை இன்னும் அதிகமாக்கிற்று.

''சக்கரவர்த்தி.....'' என்று ஆரம்பித்தவள் தயங்கி நிறுத்தினாள்.

''ஓ! என் தவறுதான்!'' என்று சொல்லி நாகநந்தி தம் தலையிலிருந்த கிரீடத்தை எடுத்தார்.

சிவகாமியின் குழப்பம் நீங்கியது.

''சுவாமி! தாங்களா! இந்த வேடத்தில்......?'' என்றாள்.

''ஆம்; சிவகாமி! ஒரு சமயம் இந்த வேடம் பூண்டு உன் தந்தையின் உயிரைக் காப்பாற்றினேன்.... இன்று உன்னைக் காத்தேன். இன்னும் ஒரு கணம் சென்று வந்திருந்தால் அந்த ராட்சஸி உன்னைக் கொலை செய்திருப்பாள்! உன்னை மட்டுமா? வானமும் பூமியும் கண்டு வியக்கும்படியான அற்புத நடனக் கலையையும் உன்னோடு சேர்த்துக் கொன்றிருப்பாள்.....''

''ஆனால்....'' என்று சிவகாமி தயங்கினாள்.

''ஏன் தயங்குகிறாய், சிவகாமி! என்ன வேண்டுமோ, சீக்கிரம் கேள்!'' என்றார் பிக்ஷு.

''ஒன்றுமில்லை. அந்தக் காபாலிகையின் பேரில் தங்களுக்குள்ள சக்தியை நினைத்து வியந்தேன்!''

''அது காதலின் சக்தி, சிவகாமி! அந்தப் பெண் பேய் என்னிடம் காதல் கொண்டிருக்கிறது! அதனால்தான் அவள் என் கட்டளைக்கு அவ்வளவு சீக்கிரம் கீழ்ப்படிகிறாள்!''

சிவகாமியின் முகத்தில் புன்னகையைக் கண்ட பிக்ஷு மேலும் கூறினார்: ''ஆனால், இவள் எப்போதும் இந்தக் கோர ரூபத்துடன் இருந்ததாக நினையாதே! முன்னமே சொன்னேனே, நினைவில்லையா? ஒரு காலத்தில் வாதாபி அரண்மனைக்குள்ளேயே இவள்தான் அழகியாக இருந்தாள். ஒரு நாள் உன்னைப் பற்றி இழிவாகப் பேசினாள். அதன் காரணமாக இந்தக் கதியை அடைந்தாள்!''

''ஐயோ! என்ன கோர தண்டனை!''

''அவள் இந்த மட்டோடு தப்பினாள். ஆனால் அஜந்தா குகைச் சுவரில் நீ புலிகேசியின் அடிபணிந்ததாகச் சித்திரம் எழுதியவன் என்ன கதி அடைந்தான் தெரியுமா? அவனுடைய கழுத்தைத் தொட்டு ஆசீர்வதித்தேன். அவ்வளவுதான்! உடனே அவனுடைய தேகம் பற்றி எரிய ஆரம்பித்தது. சற்று நேரத்துக்கெல்லாம் அந்தச் சித்திரக்காரன் ஓட்டமாய் ஓடி நதியின் வெள்ளத்தில் குதித்தான். அப்புறம் அவன் வெளியேறவே யில்லை!''

''ஐயோ! என்ன கொடுமை! எதற்காக இப்படியெல்லாம் செய்தீர்கள்?'' என்று இருதயம் பதைபதைக்கச் சிவகாமி கேட்டாள்.

''ஆஹா! இதுமட்டும்தானா உனக்காகச் செய்தேன்? சிவகாமி! இன்றைக்கு இந்தப் பெரிய வாதாபி நகரம் தீப்பற்றி எரிகிறதே? இதற்குக் காரணம் யார் தெரியுமா? இன்று இந்த மாநகரத்தில் பல்லவ வீரர்கள் பிர



வேசித்து அட்டகாசம் செய்வதற்கும், இந்த நகரத்தில் வாழும் இலட்சோப இலட்சம் ஜனங்கள் பித்துப் பிடித்தவர்கள் போல் அங்குமிங்கும் சிதறி ஓடுவதற்கும் காரணம் யார் தெரியுமா? தேசத் துரோகியும், குலத் துரோகியுமான இந்தப் பாதகன்தான்!'' என்று சொல்லிப் பிக்ஷு படீர் படீர் என்று தமது மார்பிலே குத்திக் கொண்டார்.

இதனால் பிரமை பிடித்து நின்ற சிவகாமியைப் பார்த்து மேலும் சொன்னார்: ''சிவகாமி! இந்த நகரை விட்டு அஜந்தா கலை விழாவுக்காக நான் போனபோது பல்லவன் படையெடுத்து வருகிறான் என்பதை அறிந்தேன். ஆயினும், என் சகோதரன் புலிகேசியிடம் அதைச் சொல்லாமல் மறைத்து அவனை அஜந்தாவுக்கு அழைத்துச் சென்றேன்.

பின்னி கூட
என்றும்
மாற்ற விரும்பாத
சில பொருட்கள்
உள்ளன!

## நல்ல வேளை,
## சில பொருட்கள் என்றும் மாறுவதே இல்லை!

இந்த நாட்களில் இயல்பான நிலைகளின் தோற்றத்தையும் பின்னியின் தரம் என்றும்போல் நம்பிக்கையூட்டுவதையும் காணும்போது களிப்படைகிறோம்.

பின்னி உயர்ந்த நாகரீகத்தையும் நீடித்த உழைப்பையும் எப்படி இணைத்துத் தருகிறது என்பதைப் பாருங்கள். எண்ண முடியா வண்ணங்கள்! அள்ள முடியா கோலங்கள்! பின்னி டெரீன் இழை கலந்த தரமான ஆடைகளை அணிந்து களிப்படைவீர்.



நாகரீகம், அத்துடன் நீடித்தும்
உழைப்பவை — பின்னி மட்டுமே
நயமுடன் இணைத்துத்தர முடியும்!

**பின்னி** 'டெரீன்' இழைகலந்த துணிகள்

Interpub/BB/55/75 Tam

ஏன் தெரியுமா? உன் ஒருத்தியின் சந்தோஷத்துக்காகத்தான். உன்னுடைய சபதம் நிறைவேறுவதைப் பார்த்துவிட்டு நீ இந்த நகரத்தை விட்டுக் கிளம்புவதற்காகத்தான். அதற்காகவே, என் உயிருக்குயிரான உடன்பிறந்த தம்பியையும் பறி கொடுத்தேன். வாதாபிச் சக்கரவர்த்தியின் மரணத்துக்கு இந்தப் பாதகனே காரணம்!'' என்று சொல்லிய பிக்ஷு மறுபடியும் தம் மார்பில் அடித்துக் கொண்டார்.

சிவகாமியின் உடம்பெல்லாம் பதறியது. பிக்ஷுவின் கையைக் கெட்டியாகப் பிடித்து அவர் அடித்துக் கொள்வதைத் தடுத்தாள்.

சிவகாமி தன்னுடைய தளிர்க் கரத்தினால் தொட்ட உடனேயே நாகநந்தியடிகள் சாந்தம் அடைந்தார்.

''சிவகாமி! உன்னைப் பதறும்படி செய்து விட்டேன். மன்னித்துவிடு!'' என்றார்.

''மன்னிப்பதற்கு என்ன இருக்கிறது சுவாமி! அன்று என் தந்தையின் உயிரைக் காப்பாற்றினீர்கள். இன்று என் உயிரைக் காப்பாற்றினீர்கள். இதற்காகவெல்லாம் தங்களுக்கு எவ்வளவோ கடமைப் பட்டிருக்கிறேன். ஆனால், இந்தப் பேதைக்காகத் தாங்கள் இவ்வளவு சிரமம் எடுத்திருக்க வேண்டாம்....''

''சிவகாமி! உன்னை இன்னும் நான் காப்பாற்றி விடவில்லை. உன் தந்தைக்காகவும் உனக்காகவும் நான் செய்திருக்கும் காரியங்களுக்கு நீ சிறிதேனும் நன்றியுள்ளவளாக இருந்தால், இப்போது எனக்கு ஓர் உதவி செய்!''

''என்ன செய்ய வேண்டும், சுவாமி?''

''என்னிடம் நம்பிக்கை வைத்து என்னுடன் புறப்பட்டு வா!''

சிவகாமி திடீரென்று சந்தேகமும் தயக்கமும் கொண்டு, ''எங்கே வரச் சொல்கிறீர்கள்? எதற்காக?'' என்று கேட்டாள்.

''சிவகாமி! இந்தப் பெண் பேய் உன்னைக் கொல்ல யத்தனித்ததோடு உனக்கு வந்த அபாயம் தீர்ந்துவிடவில்லை. பல்லவர்கள் வைத்த தீ அடுத்த வீதி வரையில் வந்துவிட்டது. இன்னும் அரை நாழிகையில் இந்த வீட்டுக்கும் வந்துவிடும். அதுமட்டுமல்ல. இந்த வீட்டு வாசலில் நின்றுகொண்டிருந்த மூர்க்க ஜனங்களின் கூட்டத்தைப் பார்த்தாயல்லவா? அவர்கள் உன்னைத் துண்டு துண்டாக வெட்டிப் போட வெறி கொண்டிருக்கிறார்கள். இந்த நகரத்துக்கு நேர்ந்த விபத்துக்கு நீதான் காரணம் என்று நினைக்கிறார்கள்...''

இந்தச் சமயம் வீட்டு வாசலில் ஏதோ பெரிய ரகளை நடக்கும் சத்தம் கேட்டது. கதவு திறந்து மூடும் சத்தமும், அதைத் தொடர்ந்து ஓர் அலறலும் கீழே ஏதோ தொப்பென்று விழும் ஓசையும் விரைவாக அடுத்தடுத்துக் கேட்டன.

சிவகாமியின் உடம்பு நடுங்கிற்று.

''மூர்க்க ஜனங்களின் அட்டகாசத்தைக் கேட்டாயல்லவா, சிவகாமி? இங்கே இருந்து இந்த மூர்க்க ஜனங்களால் நீ கொல்லப்பட வேண்டுமா? என்னுடன் வர மாட்டாயா?'' என்றார் நாகநந்தி.

நாகநந்தி கூறுவது உண்மைதான் என்ற நம்பிக்கை சிவகாமிக்கு உண்டாயிற்று. ''அடிகளே! என்னை எங்கே எப்படி அழைத்துச் செல்வீர்கள்?'' என்று கேட்டாள்.

''இத்தகைய அபாய காலத்தை எதிர்பார்த்து இந்த வீட்டிலிருந்து சுரங்க வழி ஏற்படுத்தி யிருக்கிறேன். என்னை நம்பி நீ புறப்பட்டு வந்தால் அரை நாழிகை நேரத்தில் உன்னை இந்தக் கோட்டைக்கு வெளியே கொண்டு போய்ச் சேர்ப்பேன்!''

''சுவாமி! அதுமட்டும் என்னால் முடியாது. தங்களை ரொம்பவும் வேண்டிக் கொள்கிறேன். இந்த வீட்டிலிருந்து நான் வெளிக் கிளம்ப மாட்டேன்.. தாங்கள் செல்லுங்கள்.''

''சிவகாமி! நான் சொல்ல வந்ததை நீ முழுவதும் கேட்கவில்லை. உன்னை எங்கே அழைத்துப் போக உத்தேசித்திருக்கிறேன் என்று தெரிந்து கொள்ளாமலே சொல்லுகிறாய். ஒருவேளை முன்னொரு சமயம் சொன்னேனே அந்த மாதிரி என்னுடன் அஜந்தா மலைக் குகைக்கு வரும்படி அழைப்பதாக எண்ணிக் கொண்டாயோ, என்னவோ? அந்தக் கனவையெல்லாம் மறந்துவிட்டேன், சிவகாமி! உன் மனம் ஒருநாளும் மாறப் போவதில்லை என்பதை அறிந்து கொண்டேன். இப்போது என்னுடைய கவலையெல்லாம் உன்னை எப்படியாவது தப்புவித்து உன் தந்தையிடம் சேர்ப்பிக்க வேண்டும் என்பதுதான். கோட்டைக்கு வெளியே சென்றதும் நேரே உன் தந்தையிடம் கொண்டு போய் உன்னை ஒப்படைப்பேன். பிறகு என் வழியே நான் செல்வேன்.''

சிவகாமி சிறிது சிந்தனை செய்துவிட்டு, ''சுவாமி! உங்களை நான் பூரண

---

மாய் நம்புகிறேன். ஆனாலும் இந்த வீட்டை விட்டு நான் புறப்பட மாட்டேன். அவர் வந்து என்னைக் கரம் பிடித்து அழைத்துச் சென்றால் இங்கிருந்து போவேன். இல்லாவிட்டால் இங்கேயே இருந்து சாவேன்!'' என்றாள்.

நாகநந்தியின் முக பாவம் இமைரென்று மாறியது. அவர் கண்களில் தணல் வீசியது. நெருப்புச் சிரிப்புச் சிரித்த வண்ணம், ''உன் காதலன் மாமல்லன் இங்கு வந்து உன்னை அழைத்துப் போவான் என்று நினைக்கிறாய்; ஒருநாளும் இல்லை!'' என்றார்.

''ஏன் இல்லை?'' என்று ஒரு குரல் கேட்டது. இருவரும் திரும்பிப் பார்த்தார்கள். காபாலிகை, ''சிவகாமி! பிக்ஷு சொல்வதை நம்பாதே! இதோ உன் காதலன்!'' என்று சொல்லிய வண்ணம் தான் தூக்கிக் கொண்டு வந்த உடலைத் தரையிலே போட்டாள். மார்பிலே கத்தி ஊடுருவியிருந்த உருவத்தைச் சிவகாமி ஒரு நிமிஷம் உற்றுப் பார்த்தாள்.

அது கண்ணனுடைய முகம் என்று தெரிந்ததும், ''அண்ணா!'' என்று அலறிக்கொண்டு அந்த உடலின் அருகில் சென்றாள்.

கண்ணபிரானுடைய கண்கள் திறந்தன. சிவகாமியின் முகத்தை ஒரு கணம் உற்றுப் பார்த்தான். ''தங்காய்! உன் அக்கா கமலி உன்னை ஆசையோடு எதிர்பார்க்கிறாள்; சின்னக் கண்ணனும் உன்னை எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறான்!'' என்று அவனுடைய உதடுகள் முணுமுணுத்தன.

மறுகணம் அந்தச் சிநேகம் ததும்பிய முகத்தில் மரணக் களை குடிகொண்டது.

பேதை சிவகாமி மூர்ச்சையுற்றுக் கீழே விழுந்தாள். (தொடரும்)

# இலங்கை அணி இளைஞர் அணி



இலங்கை காப்டனும் மானேஜரும்

''இளம் கிரிக்கெட் கோஷ்டி என்கிறீர்களே சராசரி வயது என்ன?'' என்று இலங்கையிலிருந்து வந்துள்ள டீமின் மானேஜர் திரு நீல் பெரைராவைக் கேட்டேன்.

''சராசரி வயது 26. முப்பத்தேழுவயதுள்ள டி. சகபந்து இந்தியாவுக்குப் பல தடவை வந்து அறிமுகமானவர். இளம் அனுரா ரணசிங்கேக்குப் பத்தொன்பது வயது!''

காப்டன் அனுரா டென்னிகூனுக்கு மணமாகி விட்டது. இருபத்தெட்டு வயதாகும் அவருக்குப் புத்தகங்கள் படிப்பதும், சங்கீதம் கேட்பதும் பொழுதுபோக்குகள். இவருக்குக் கிரிக்கெட் ஆட்டம் தவிர ஹாக்கி, பாட்மிண்டன் ஆட்டங்களில் தேர்ச்சி உண்டு.

''உங்கள் கிரிக்கெட் கோஷ்டியின் அமைப்புப் பற்றித் தெரிந்து கொள்ளலாமா?''

''எட்டு பாட்ஸ்மன்கள்; இரண்டு விக்கெட் கீப்பர் பாட்ஸ்மன்கள்; இரண்டு விரைவாகப் பந்து வீசும் நிபுணர்கள்; நான்கு ஸ்பின்னர்கள் கொண்ட பதினறு பேர் குழுவாக இந்தியாவுக்கு ஆட வந்திருக்கிறோம்!''

''இந்திய பௌலிங்கை உங்களால் சமாளிக்க முடியும் என்று கருதுகிறீர்களா?''

''ஓ! ஆனைப்பட்ட ஆஸ்திரேலியப் பயங்கரப் பந்துவீச்சு நிபுணர்களான லில்லி, தாம்ஸனை உலகக் கோப்பையில் ஆடிச் சமாளித்தவர்களாயிற்றே. எங்கள் இரு நல்ல பாட்ஸ்மன்கள் அடிபட்டிராவிட்டால் பாகிஸ்தான் கோஷ்டியை ஒரு கை பார்த்திருப்போம்!'' என்றார் காப்டன் டென்னிகூன் உணர்ச்சியோடு.

இளம் 'குருத்து'க்களடங்கிய இலங்கை கோஷ்டி இந்திய மண்ணில் ஆட அடியெடுத்து வைத்து விட்டது! இங்கோ இந்தியக் காப்டன் தேர்வுப் பிரச்னை இன்னும் பிரச்னையாகவே இருந்து வருகிறது! அது போகட்டும்! இளம் விருந்தினர்களாகிய இலங்கை ஆட்டக்காரர்களை நல்வரவு கூறி வரவேற்கிறோம்.

இங்கு நடக்கப் போகும் மாட்சுகளைப் பொறுத்து, இலங்கைக்கு டெஸ்ட் அந்தஸ்து வழங்கப்படும் என்பதால் அவர்கள் ஆட்டத்தில் மிகுந்த ஆர்வமும் சுறுசுறுப்பும் காட்டுவார்கள் என்பது உறுதி. — குண்டுமணி



# ஆண்டாளு

"கூற்றுவன்"

ஆண்டாளுப் பாட்டியின் நடத்தையைக் குறித்து அந்தக் கிராமமே மூக்கின் மீது விரல் வைத்து நிற்கிறது.

எப்போதோ பதவிசாக இருந்த கிராமம் இப்போது களை இழந்து சிதைந்து சிதலமாகித் தன்னைத் தானே முடக்கிக் கொண்டு கிடக்கிறது. துறைமுகப் பட்டினமாக இருந்த குலசேகரப் பட்டணம், துறைமுகத்துக்குரிய மாண்பும் மாட்சியும் போய் அமங்கலமாவதைக் கூடவே இருந்து கண்டவள் இந்த ஆண்டாளு. ''ஓகோ.....'' என்று வாழ்ந்த சைவப் பிள்ளைமார்களும் கப்பல் வியாபாரம் செய்த மரைக்காயர்களும் ஒழிந்து தொலைந்தனர். அவர்களை அண்டிப் பிழைத்த பல பட்டறைக்காரர்களும் பிழைப்புத் தேடி வேற்றிடம் குடிபெயர்ந்தனர்.

ஆண்டாளு அடிக்கடி சொல்வாள்: ''பிழைக்க வழியில்லே.... கொழும்பு துட்டும் வர்றதில்லே.......''

காந்தியத்தின் சாத்விகத்தையும் மீறித் திருஷ்டிப் பரிகாரம் போல் நடந்த ஒன்றிரண்டு அத்துமீறல்களில், ''குலசேகரப் பட்டணம் சதி வழக்கு''ம் ஒன்று. அன்று ஊரே அல்லோலகல்லோலப்பட்டதையும்.... போலீஸ் நடமாட்டத்தையும் தாங்கள் கதி கலங்கிப் போனதையும் ஒரு பெரிய கதையாகவே சொல்வாள் கிழவி. அது நடந்தது நாற்பத்திரண்டில். ஆண்டாளுப்பாட்டி ஞாபகப்படுத்தி ஒவ்வொன்றாகச் சொல்வாள்.

நொடித்து போன அந்த ஊரில் சற்றுத் தளிர்விட்டுத் துளிர்த்துக் கொண்டிருப்பது அவள் இருந்து நல்லதும்கெட்டதும் பார்க்கிற சில ''கோனார்கள்'' வீடுகளே. அதற்கும் அவள் சொல்வாள்:

''இருந்து தின்னால் சொக்கத் தங்கமும் தங்காது..... ஆணும் பெண்ணும் பாடுபட்டாத்தான் வயிறு கழுவலாம்.....'' இருபாலாரும் சரிசமமாக உழைக்கும் மிக எளிய குடும்பங்கள்.

ஆண்டாளு சம்பந்தப்பட்ட மட்டில் அவள் மட்டுமே உழைத்தாள். அது அவள் ஊழ்வினை.

இரண்டு எருமை மாடுகளைக் கட்டி இந்தத் தள்ளாத வயதிலும் பால் கறக்கிறாள்.... சுக்கு போல் வத்தலான உடல். ''பாம்படம்'' போட்ட வடித்த காதில் இப்போது நகையில்லை.

அந்த ஊரின் ஜீரணிப்பிலும் அவளது பால் வியாபாரம் ஏகபோகமாகவே நடந்தது. விற்ற பாலை விட.... விற்ற தண்ணீரே அவளது ஆயுளில் அதிகம் இருக்கும்.

எல்லாச் செயல்களிலும் தர்மம்... பாவம் புண்ணியம் என்று பேசுகிற கிழவி. ''இடைச்சி பாலில் தண்ணீர் இல்லாமல் விற்கிறதாவது......'' எனத் தனது குல தர்மத்தை அடித்துப் பேசுவாள். தான் தண்ணீர் கலப்பதை ஒத்துக் கொள்வது கௌரவம் என்றும் கருதினாள்.

மாதாந்திரத் தவணையில் பால் வார்ப்பாள். தன் வரையில் மிகவும் செட்டும் கட்டுமாய் இருந்தாள். தவணைப் பணத்தைக் கேட்பதில் சற்றுத் தாராளம். பால் வார்த்த பணம் தரவில்லை என அவள் யாரிடமும் எப்போதும் வாதிட்டதில்லை.

''முடியாமப் போனா... போகட்டுமே. எம்புள்ளைகளா இருந்தா.... ஊத்தமாட்டேனா.....?'' மிகவும் உதார குணத்தோடு அவள் நடந்து கொள்வாள்.

எல்லாத் தரப்புக் குடும்பங்களின் நல்லது கெட்டது அத்தனைக்கும் ஆண்டாளுப் பாட்டி செல்வாள்.

நிறைசூலிகள் இருக்கிற வீட்டில் பிரசவம் முடியும் வரை ஆண்டாளுப் பாட்டியின் குரல் ஒலிக்கும்.

ஆண்டாளுக் கிழவிக்கு யாரும் எதுவும் விலக்கில்லை. சாவு வீட்டிலும் அவளது ஒப்பாரியே மேலோங்கிக் கேட்கும். பாட்டுப் பாடி அழ ஆரம்பித்தால் வாய் அமர்த்தி நிற்க வைக்க மூன்று பேர் வேண்டும்.



கல்யாண வீட்டில் பந்திக்கு முந்தி விளக்கு முன் பூஜையானதும் மூன்று இலைகளில் ஒரு இலை 'படைப்பு' ஆண்டாளுப் பாட்டிக்குத் தான். ஏனெனில், ஆண்டாளுப் பாட்டி நித்திய சுமங்கலி.

அவளுக்குக் கல்யாணம் ஆனது அவளுக்குத் தெரியும். கட்டை வண்டி வைத்து எட்டு மைல் போய்த் திருச்செந்தூரில் சாமி கும்பிட்டது. கடல் நீரைக் கண்டு பயந்து அடம் பிடித்து அழுதது..... முதன் முதலாக யானையை வேடிக்கை பார்த்தது.... எல்லாமே நினைவிருக்கிறது.

அறியாத வயதில் ஆழ்ந்த இருளில் தன் முகத்தோடு முகம் புதைத்துத் தன்னை எச்சில் படுத்துகிற அவனது சேட்டை குறித்து விசனித்து, அவனது காதிலே பளிச்சிடும் வைரக் கடுக்கனின் ஜொலிப்பிலே வாய் பிளந்து கிடந்தது கனவு போல் நெருடுகிறது.

ஒரு நாள் அந்திக் கருக்கலில், சந்தியில் நின்று கோழுவோடும்..... பேச்சியோடும் தட்டாமாலை விளையாடியது நினைவிருக்கிறது. ''போவிட்டு வரேன்'' என்று அவன் போன போது தான் மூர்க்கமாக விளையாட்டில் ஈடுபட்டிருந்த அவலம் பின்னர் பல காலம் நெஞ்சில் தைத்ததுண்டு.

பிறிதொரு நாள்.....நாலு பேர்கள் சேலை முனைகளைப் பிடித்து மறைத்துக் கொள்ள— தனது மேனியிலிருந்த எல்லாவற்றையும் களைந்து – மஞ்சளும் மலரும் கலந்த நீரைக் குடம் குடமாகக் குலவை ஒலிக்கிடையே தன் மீது வார்த்துக் காதல் புனித நன்னீராட்டு செய்த நிலையில்; புரியாத பேதைமையில் கழுத்தில் கிடந்த கயிற்றை முனைந்தபோது, ''அதையேண்டி கழற்றுறே....? அது உன் தாலி.......'' என்று சொன்னார்கள்.

மங்களகரமான அந்த வேளையில் சொன்னதன் பலன் ஆண்டாளு இன்றளவும் நித்திய கல்யாணி.

இடையில் இந்த ஊரில் என்ன என்னவோ நடந்து போயிற்று. அவளைப் பொறுத்தமட்டில் நிரந்தரமாக நிற்பது அந்த மஞ்சள் கயிறும்..... தாலியும்.....

இனம் புரிந்த நிலையில் மனத்தில் கனம் வந்து நிறைந்தது. பருவம் அடைந்தால் வீட்டைவிட்டு வெளி வராத அவளது இனத்தில் அவளுக்கு முன்னரே கல்யாணமாகி விட்டதால் அந்தத் தடையில்லை.

முன் போலவே பின்னும் ஆடிப் பாடிய நிலை. தன்னையொத்தவர்கள் ஒன்றன்பின் ஒன்றாக 'மூலை'யில் இருந்து பின்னர் எங்கெங்கோ ஆளுக்கொரு மூலையாய்ச் சிதறிப் போன நிலையிலும் ஆண்டாளு குலசேகரப் பட்டணத்தின் தெருக்களிலே.... ''பால்.... தயிர்'' என வளைய வளைய நிரந்தரமாக வந்தாள். அதுவே நித்திய ஜீவனம்சமாகவும் போய்விட்டது.

எப்படியோ கள்ளத் தோணியில் கொழும்பு போனவனுக்கு ஆண்டாள் 'சமைந்து' போனது தெரியப்படுத்தப்பட்டது. அவனும் இரண்டொரு முறை பணம் அனுப்பியதாகத் தகவல். பின்னர் யாருக்கு.... யாரோ.... என்பது போல் போயிற்று.

''சுவைக்கப்படாதது எதுவுமே சுவாரசியப்படுவதில்லை.....'' என்பது அவள் மட்டில் யதார்த்தம். இது குறித்து அவள் சிந்தித்ததும் இல்லையாகையால் நிந்தித்ததும் இல்லை.

தன்னை ஒதுக்கி வைத்து, ''ஔவை விரதம்'' அனுஷ்டித்த நாச்சியாரையும் கோமதியையும் அவள் வசை பாடித் தீர்த்திருக்கிறாள்.

இத்தனைக்கும் அவள்தான் இந்த வெள்ளியில் யார் வீட்டில் வைத்து விரதம் என்பதை ஒவ்வொரு வீட்டுக் குமரிக்கும் சொல்லி வருவாள்.

வீட்டின் தலை வாசல் தாண்டாத பருவம். பெண்கள் ஆடி மாத வெள்ளிக்கிழமை இரவு பாதுகாப்பான, ஆண் துணையில்லாத ஒரு பெரிய மனுசியின் வீட்டில் கூடித் தங்களது தாபங்களையும், பிரதாபங்களையும் பகிர்ந்து கொள்ள அளிக்கப்படும் சந்தர்ப்பம். உமியை விறகாக்கிப் பச்சரிசி கொழுக்கட்டை சமைத்துப் பூசை செய்வர்.

ஆண்டாளு..... கன்னி கழிந்தவள் என்று காரணம் காட்டி அவளை விலக்கி வைப்பார்கள்.

அந்த வயதின் ஆதங்கம் குறித்துப் பின்னைய நாட்களில் அவள் கூச்சப்பட்டதுண்டு.

அன்று மறுக்கப்பட்டதற்கு ஈடாகவோ என்னவோ இப்போது வருடா வருடம் இந்தக் கிழவியின் வீடே கதி என்று தஞ்சம் அடைந்து நிற்கின்றனர்.

ராணி வீட்டில் இருந்தவரை எல்லாப் பெண்ணுகளும் வந்து கலகலப்பாய் இருந்தது.





## புதுமை பனியன்!

ஊறுகாய், பீர், பூண்டு, சாக்லேட், வாழைப்பழம், பூக்கள், ஆரஞ்சு இப்படி எந்த வாசனை வேண்டுமானாலும் வரும்படியாக செண்ட் போட்ட பனியன்கள் இப்பொழுது அமெரிக்காவில் தயாராகின்றன. ஒவ்வொரு பனியனிலும் என்ன வாசனை என்று ஒரு மூலையில் அச்சிடப்பட்டிருக்கும்.

ஆன்லுக்கர் — பாபு

---

கடந்த புரட்டாசியில் தன்னோடு ஒரே பாயில் படுத்துக் கிடந்த ராணியைப் பெருங்குளத்தில் ''வாழ்க்கை''ப்பட வைத்துப் புருஷனோடு அனுப்பி விட்டாள். பத்துப் பதினைந்து வருடங்கள் அவளது காலை வளைய வளைய வந்த ராணி போய்விட்டாள்.

'' வருவான்..... வருவான்....'' என்று காத்திருந்து நரை திரைந்த நிலையில் கடந்த சில வருடங்கள் ராணி தன்னோடு ஒட்டிக் கொண்டது இதமாயிருந்தது.

''ஏம் பாட்டி.... தாத்தா வருவாருன்னு நீ நிம்மதியா......'' யாரோ ஒரு வாண்டு கேட்டது.

''யாரையடி.... தாத்தான்னே....'' இவளுக்குப் பொத்துக் கொண்டு வந்தது. வைரக் கடுக்கன் ஜொலிக்க.... முன் சிரசு மழிக்கப் பட்டுப் பின்கொண்டையாக... தன்னுள்ளே அவனது ரூபம் விசுவரூபம் எடுத்தது. அந்தச் சாயலைப் பின்னர் யாரிடமும் அவள் கண்டாள் இல்லை.

''ஒன் வீட்டுக்காரரைத்தான்....''

''ஓ.... அவரைச் சொன்னியா.....?'' பாட்டியின் கோபம் தணிந்து போகிறது.

எப்படியோ நாட்கள் ஓடிப் போய்விட்டன. தனது புருசன் இருக்க வேண்டும் என்று கூட அவள் நினைத்துப் பார்த்ததில்லை. சொந்தம் என்ற ஒரு சுகமில்லையெனில் பிரிவு என்ன வேதனை ? இது விஷயத்தில் பல வருடங்களாக நிச்சிந்தையாகவும் விச்ராந்தியாகவும் அவளால் இருக்கப் பழகிப் போய் விட்டது. எனவே ஆண்டாளு நித்தியசுமங்கலி. கயிறு அற்றுப் போன நிலையில் மாற்றிக் கொள்கிறாள். தாலியில் தங்கம் மறைந்து கறுப்பாக மெருகு மட்டுமே தெரிகிறது.

தனது வாழ்வின் அழிவை அணு அணுவாக அனுபவிக்கிறது போலவே அந்த ஊரின் அமங்கலத்தையும் அவள் அறிவாள். துறைமுகம் போயிற்று ; அதனைச் சார்ந்த பண்டகசாலைகளும் தகர்ந்தொழிந்தன. சர்க்கரை ஆலையும்..... உப்பளங்களும் ஒன்றன்பின் ஒன்றாய் மறைந்தன. துரைகளும் கப்பல் ஏறிப் போயினர். விளக்கேற்றக்கூட ஆள் இல்லாத வீடுகளின் சட்டமும் சுவரும் சிதைந்து சிதிலமாகிப் போகிறது. சமுத்திரத்தின் கரைப் பக்கம் வரும் வேளையில் அடி நாட்களின் நினைவுமேல் எழுகிறது.

சூரியன் ஒரு பனை உச்சத்துக்கு மேலேறி விட்டது. முகத்தோடு முகம் புரியாத இருளில் போன அவளது ஓலைப் பெட்டியில் பாதி அளவு சாணம் சேரவில்லை. உடன் குடிக்குப் போகிற சாரி சாரியான கட்டை வண்டிகளின் பின்னாலேயே ஒரு நடை போய்த் திரும்பிவிட்டாள். வருகிற வழியில் பத்துப் பைசா கொடுத்து ஓர் அலுமினிய டம்ளர் அளவு 'பதனீர் தண்ணி' குடித்தது இப்போது வயிற்றைப் புரட்டியது.

''தரித்திரம் தலை முழுகப் போனால் சமுத்திரத்தில் தண்ணீர் இல்லையாம்.....'' தனது பெட்டியில் மாட்டுச் சாணம் நிரளாததற்கு அவளது வியாக்கியானம்.

பாலத்தின் மேல் வந்து உட்கார்ந்தாள். நாசரேத் போகிற பஸ் அவளைத் தாண்டிச் சென்றது. மணி பத்திருக்கும் எனத் தனக்குள் அனுமானித்தாள். பாலத்தின் மதிலில் ஏறிக் கிராமத்து வாண்டுகள் தேங்கிக் கிடக்கும் நீரில் பனம் பழமாய்த் தொப்.... தொப்..... என விழுந்தனர். மார்பளவு தண்ணீருள்ள வாய்க்காலில் கிராமத்து இளவட்டங்கள் மாராப்புச் சேலையோடு நின்றிருந்தனர்.

வடிவு கரையேறி வந்தாள்.... ஈரச் சேலை கரண்டைக் காலில் அடிபட்டுச் சரக்...சரக்... கென ஒலி யெழுப்பிற்று.

''ஏண்டியம்மா..... வடிவு.... தானே? சேலையைக் கொஞ்சம் தூக்கி முடிச்சிடறது.... சேலை பட்டுன்னு தெரிச்சிடாதோ....''

''யாரு..... கிழவியா.....?''

''அத வேற.... சொல்லிக் காண்பிக்கிறியாக்கும்.... நீ மட்டும் குமரியாவே இருந்தாயோ.....''

பேசிக் கொண்டே ஆசுவாசமாகத் தனது மடியில் வைத்திருந்த கடைசி அரை வெற்றிலையையும் பாக்கையும் வாயில் போட்டுக் குதப்பினாள். ''பாட்டி, விண் விண் என்று தெறிக்கிறது. ஜாக்கெட் தெப்பலா நனைந்தும் போயிடறது... ஏதாவது மருந்து சொல்லேன்...'' வடிவு எதற்கோ மருந்து கேட்டாள்.....

ஆண்டாளு தனது பொக்கை வாய் திறந்து சிரித்து. ''இன்னைக்குச் சந்தைக் கிழமை தானே.... ஒரு கால் படி மல்லிகைப்பூ வாங்கிப் படுக்கிறப்போ நெஞ்சில் வைச்சுக் கட்டிக்கோ....'' என்று வைத்தியம் சொன்னாள்.

''சாணிப் பெட்டியை நான் தூக்கியாறட்டுமா ?''

'' வேண்டாம்.... எஞ்சுமையை நான் தானே சுமக்கணும்..... பாவம்.... உனக்குத் தக்கலை..... ஒன்னுக்கு ரெண்டு பெத்து. பெத்ததும் இரண்டையும் தூக்கிக் கொடுத்திட்டே......கொடுப்பினையில்லே... அதென்னடியம்மா.... சொல்லி வைச்ச மாதிரி ஆத்தாளும் மகளும் ஒன்னு வயிற்றை நிரப்புன்னு நின்னீங்க.... நா... உங்க அப்பன் சடையனைக் கேக்கறேன்.....'' கிழவி எதை எதையோ இணைத்துப் பேசினாள்.

''கிழவி நீ பொல்லாதவ.... கேட்டாலும் விதரணை இல்லாமல் கேட்பே.....'' வடிவு

# இணையற்ற எழில்மேனி.
# மென்மை, வழவழப்பு, இயற்கையான வனப்பு.

ஆம்! லக்ஸ் ஸுப்ரீம் உங்கள் மேனி-எழிலுக்கு மெருகூட்டுகிறது. நீங்களே அதை உணர்ந்து மகிழ்வீர்கள். காரணம், லக்ஸ் ஸுப்ரீம் மட்டுமே ப்யூடி க்ரீம் உட்கொண்டதாகும். பெருகும் அதன் செழுமையான நுரையில் உள்ள ப்யூடி க்ரீமின் ஸ்பரிசத்தையும் அதனின்று கமழும் இணையற்ற மெய்மறக்கச் செய்யும் நறுமணத்தையும் நீங்கள் உண்மையாகவே அனுபவிக்கமுடியும். அதன் செழுமையான நுரை உங்களது சருமத்தைத் தழுவிச் சென்று, மேனியைப் பட்டுப்போன்று மிருதுவாக இயற்கை வனப்புடன் வைக்கிறது.




**வேறு எந்த சோப்பையும் பற்றிய சிந்தனையும் எழாது.**

இந்துஸ்தான் லீவர் லிமிடெடின் தரமான தயாரிப்பு.

HLLS-8698 A

அதில் என்ன சுகானுபவத்தைக் கண்டு சிரித்தாள்......?

'' என்னடி கேட்பேங்குறே.... எனக்கு என்ன பயமோ.... நான் அறிய பொறந்த பையன் அவன்..... அது போகட்டும்....உங்க ஆத்தா இந்த மாசச் சீட்டுப் பணம் தரலியே. மாடசாமிகிட்டே கொடுத்துடச் சொல்றியா? வைகாசிப் புறந்தாச்சு.... ஆனி போய்விட்டால் ஆடியில் சங்கரன்கோயில் தபசுக்குப் போகணுமே.....''

வடிவு சரி என்பது போல் ''சூள்'' கொட்டினுள்.

'' ஏண்டி..... அப்படி 'விசுக்... விசுக்' குன்னு ஓடறே... நான் என்ன ஓடறவயசா. சரி, நீ போ.... அதா உங்க சித்தப்பன் ராமசாமி வரான்... அவங்கிட்ட கொஞ்சம் பேசி அனுப்பிடறேன்.......'' கிழவி நடையைப் பம்மிப் போட்டாள்.

''ராணியை எப்பப் பாட்டி கூட்டியாறே?'' போகிற போக்கில் கேட்டாள் வடிவு.

''அதுக்குத்தாண்டி ராமசாமியைப் பார்த்துப் பேசணும்.... ஒரு நடை பெருங்குளம் வரை அவனைப் போய் வரச் சொல்லலாம்னு இருக்கேன்.''

''பாட்டி...'பொங்கிப் போட' போறப்போ சொல்லு. நானும் வரேன்.... பெருங்குளம் பார்த்ததில்லே.....''

''மகராசியா... வா... நீ இல்லாமலா...'' ஆண்டாளு ஊரின் எல்லையில் உள்ள அம்மன் கோயில் திண்ணையில் பெட்டியை இறக்கி வைத்து உட்கார்ந்தாள். அந்த வெய்யிலுக்கு வேப்ப மரத்தின் ''காத்துச் சொகம்'' அவளுக்கு ரொம்பத் தேவைப்பட்டது.

நான்கு வயதில் தன்னோடு ஒட்டிக் கொண்ட ராணிக்கு ஆண்டாளுதான் எல்லாமும். ராணி இருக்கும் வரையில் குடிசைக்கு அவளைக் காவல் வைத்துவிட்டு எங்கு வேண்டுமானுலும் அவளால் போக முடிந்தது.

ஒரு முறை..... ''செத்தே இவளைப் பார்த்துக்குங்க.... கோயிலுக்குப் போயிட்டு வந்திடறேம். எட்டு மைலு இவ நடக்கமாட்டா..... நெல் குதிராட்டம் இருக்குது.... தூக்கிச் சுமக்க முடியாது'' என்று போன ராணியின் தாயும் தகப்பனும் திருச்செந்தூர் வைகாசி விசாகத் திருவிழாவில் காரில் அடிபட்டுப் பூவோடும் பொட்டோடும் ஒன்றுகவே போய்ச் சேர்ந்தனர்.

ராணி நிரந்தரமாக ஆண்டாளிடம் தங்கி விட்டாள். ராணி அவளுக்குப் பாரமாகத் தெரியவில்லை.

இப்போது ராணி பெருங்குளத்தில் வாயும் வயிறுமாக நிற்கிறுள். மாதம் ஏழு என்று போய் வந்தவர்கள் சொன்னுர்கள்.

போய்ப் பார்த்து வர ஆசைதான்...... போகப்படாது என்பது சம்பிரதாயம்.... தான் பெற்ற தாய் இல்லைதான். ஆயினும் தாயின் ஸ்தானத்தில் இருந்து எல்லாம் செய்தாகிவிட்டது.

''நீயும் வாயேன். நீ என்ன பெத்தவளா?'' கல்யாணம் முடிந்து 'மறுவீடு' செல்லும் போது எல்லோரும் அழைத்தார்கள்.

'' நான் வரும்போது.... வருகிறேன்...'' ஆண்டாளு மறுத்துவிட்டாள். இதோ மகள் வீடு போகும் வேளை வந்துவிட்டது. இவள் போய், ''பொங்கிப் போட்டு'' ராணியைப் பிரசவத்துக்காக இங்கே அழைத்துக் கொண்டு வர வேண்டும்.

ஆண்டாளுக்குத் தூக்கம் நிலைகொள்ளவில்லை. விடிந்தால் பெருங்குளம் போக வேண்டும் பெரிய மனுஷி... கைராசியானவள், சுமங்கலி என்ற காரணம் குறித்து அந்தக் கிராமத்து நல்லது கெட்டது அத்தனையையும் அவள் முன்னின்று நடத்தி யிருக்கிறுள். நானே தானே போக வேண்டும்? 'ராணி வந்தான்னு ஒரு நாலு மாசமாவது இங்கே இருப்பா... ஆணே பெண்ணே நல்லபடியா வயிற்றைக் கழுவி அனுப்பிட்டா ஒரு சுமை தீர்ந்தது...' தன்னுள் நினைத்துக் கொண்டாள். அகல் விளக்கு 'மினுக் மினுக்'கென்று எரிந்துகொண்டிருந்தது. வீடு நிறைய முறுக்குப் பானையும் பழமுமாக விரவிக் கிடந்தது.

பழத்தை எலி கடித்து விடுமோ எனச் சமுசயம் கொண்டாள்.

இராப்பாடி குடுகுடுப்பை அடித்துக் கொண்டு வருவது கேட்கிறது.

எழுந்து பானையில் கை விட்டுத் துழாவி மூன்று பிடி அரிசியை முறத்தில் போட்டு முறத்தைத் திண்ணையில் வைத்து விட்டுக் கதவைத் தாள் போட்டாள்.

இந்த இராப்பாடி சாம நேரத்தில் நேரே மயானத்திலிருந்து வருவதாக ஐதிகம். ஆகையால் பெண்கள் அவனது கண்ணில் படக் கூடாது என்பதற்காக 'போட வேண்டியதை' வாசலில் வைத்துவிட்டுக் கதவைத் தாள் போட்டுக் கொள்வார்கள். அவன் எதையாவது இரண்டைப் பாடிவிட்டு எடுத்துப் போவான்.

ஆண்டாளு அயர்ந்து தூங்கிப் போனுள். கண் விழித்தபோது விளக்கு அமிழ்ந்து போயிருக்கிறது. வெளியே விடிந்துபோய் விட்டது என்பதற்கான அறிகுறிகள். தூரத்தே பனையேறிகள் பானை இடுக்குகிற டிக் டிக் என்ற

## கலங்க வைத்த காட்சி!





பண்ருட்டி நான்கு ரோட்டுச் சந்திப்பில் 'பார் மகளே பார்' சினிமாவில் விஜயகுமாரியின் படத்தை வைத்துக்கொண்டு சிவாஜி கணேசன் அழுவது போன்ற பெரிய போஸ்டர் வைக்கப்பட்டிருந்தது. பெருந்தலைவர் காமராஜ் மறைந்த நாளன்று விஜயகுமாரியின் படத்தின் மேல் தலைவர் காமராஜ் அவர்களின் படத்தை ஒட்டிவிட்டார்கள். பார்வை தந்து சிவாஜி கணேசன் காமராஜரின் படத்தை வைத்துக் கொண்டு அழுவது போலத் தோன்றியது. அந்தக் காட்சி காண்பவர் கண்களைக் கலங்க வைத்துவிட்டது!

ப. த. தங்கவேலு,
பண்ருட்டி



## முன்யோசனை !

நண்பர்: என்ன, உனக்கு மூளை கெட்டுவிட்டதா? கேஷியர் வேலைக்கு ஒரு கால் ஊனமான, ஒன்றரைக் கண் உடைய, கூன் விழுந்த ஆள் தேவை என்று விளம்பரப்படுத்தியிருக்கிறாயே?

முதலாளி: ஆமாம்! பணத்தைச் சுருட்டிக் கொண்டு ஓடிவிட்டால் சுலபமாக அடையாளம் கண்டு பிடிக்க முடியுமே! -சம்பத் குமாரி

---

ஒலி ஒரே நிதானமாகக் கேட்டது. பக்கத்து வீடுகளில் பானைத் தயிரைக் கடைந்தெடுக்கிற ஒலி நிரவிக் கேட்டது.

ஆண்டாளு கதவைத் திறந்தாள். இராப் பாடிக்காக வைத்த அரிசி முறத்தில் அப்படியே இருந்தது. குட்டி நாய் முன்னங் கால்களைப் பரப்பி அதன் மேல் தலை வைத்துக் காவல் போல் படுத்துக் கிடந்தது.

''அட பாழாப் போற பய... இந்தக் குட்டி நாய்க்குப் பயந்து அரிசியை எடுக்காமல் போவானு... இந்தக் கொள்ளையில் இவன் ஊருக்குக் 'குறி' சொல்றானும். எல்லாம் பஞ்சம் பிழைக்க வரானுவ...'' ஆண்டாளு அவனை இரண்டு பாடிக் கொண்டே முறத்தை எடுத்து உள்ளே வைத்தாள்.

சொடுக்காகப் பாலைக் கறந்துகொண்டு, போலீஸ் லைன் வரை போய் ஊற்றி வந்தாள். சொல்லி வைத்திருந்த வில் வண்டிகள் வந்து விட்டன. ''வரேன்'' என்று சொன்னவர்கள் வந்து விட்டார்கள். எல்லாமே துரித கதியில் நடை பெற்றுக் கொண்டிருந்தது. முறுக்குப் பானைகளையும் பழங்களையும் ஒரு வண்டியில் ஏற்றி, போதாததற்குச் சில 'சிறுக'களையும் போட்டு நிரப்பினர்.

'நம்ம ஆளுக வீடு எத்தனை இருக்கும்... தரித்திரம் புடிச்ச மாதிரி செய்யப்படாது. வீட்டுக்கு அஞ்சு முறுக்கும் ரெண்டு பழமுமாவது கொடுக்க வேண்டும்...' என்று தாராளமாக முறுக்குச் சுற்றியும் பழம் வாங்கியும் வைத்திருந்தாள்.

எல்லா வீடுகளுக்கும் பழமும் முறுக்கும் கொடுப்பது கர்ப்பிணிப் பெண்ணைத் தாய் வீட்டுக்கு அழைத்துச் செல்லுகிற ''பொங்கிப் போட்டு'' கூட்டி வருகிற விழாவுக்கான சம்பிரதாயமான விளம்பரம்.

எல்லோரும் வண்டியில் ஏறியாகி விட்டது. ஆண்டாளுவும் ஏறிவிட்டால் வண்டி நடை கட்ட வேண்டியதுதான்.

''ஆமா... எல்லா வீட்டு நல்ல காரியங்களுக்கும் பாட்டி 'குறுக்க' வந்து நல்ல சகுனமா ஆரம்பிப்பா... கிழவியும் ஏறிட்டா யார் வரது...?'' இரண்டாவது வண்டியில் இருந்த கப்பம்மா கேட்டாள். அதில் இழையோடிய கேலியையும் யதார்த்தத்தையும், புரிந்து எல்லோரும் சிரித்தனர்.

''யாராவது சின்னப் பொண்ணு வரச் சொல்லுங்கோ...'' வண்டிக்காரன் குரல் கொடுத்தான்.

''யாரு வரப்போறு'' என்பது போல், கடைசி வண்டியில் விலாவில் நின்றான் கிழவி.

''யாரும் வர வேண்டாம்... நானே வருகிறேன்'' என்பது போல் துண்டை மடித்து அக்குளில் வைத்துக் கொண்டு வந்தான் அந்தச் சாய வேட்டிக்காரன்.

''நா... பெருங்குளத்துக் குடிமகன் சாமி.. ஆண்டாளு ஆத்தா பொண்ணு ராணியம்மா பெரிய இடம் போயிட்டாங்க சாமி...!''

வண்டி ஏறக் கால் எடுத்து வைக்கப் போன ஆண்டாளுப் பாட்டி கல்லாகச் சமைந்து போனாள். கலகலப்பான இடம் மரண அமைதி கொண்டது.

நேற்று தண்ணிக்குப் போன இடத்தில் இடறி விழுந்து இரத்த ஒழுக்காகி ஏரல் ஆஸ்பத்திரியில் ராணி இறந்து போனதை இறங்கி வந்த ராமசாமியிடம் அவன் சுருக்கமாகச் சொன்னான்.

''அப்போ என்ன பண்ணலாம்?'' என்பது போல் ராமசாமி சுற்று முற்றும் பார்த்தார்.

ஆண்டாளுப் பாட்டி முன் வந்து சொன்னாள்: ''நான் வரலேப்பா... கட்டிய வண்டியை அவிழ்க்க வேணும்... எல்லோரும் போங்க... நடக்க வேண்டிய காரியத்தைக் கவனிங்க...''

ராணியின் 'பெரிய காரியமாய்'ப் போகிற அந்த வண்டிகளின் எதிரே வந்து ''சகுனமாய்'' நடந்து வந்தாள் ஆண்டாளுப் பாட்டி.

விவரம் அறிந்தப் பக்கத்து வீட்டுக்காரர்கள் வந்து துயரம் தோய நின்றனர். அடக்க முடியாதவர்கள் அழுது அரற்றினார்கள். எங்காவது ஒன்று நடந்து விட்டால் வாயிலும் வயிற்றிலும் அடித்துக் கொண்டு ஒப்பாரி வைக்கும் ஆண்டாளு அமைதியாக நின்றாள்.

முறத்திலே கிடந்த மூன்று பிடி அரிசி அவளைப் பார்த்துச் சிரிப்பது போல் பிரமை கொண்டாள். அவளும் சிரித்தாள். பலமாகச் சிரித்தாள்.

''இராப்பாடியே கெட்டது வருதுன்னு சம்சயப்பட்டுட்டானே... சொல்லிவிட்டுப் போறது... நான் எப்பத்தான் மணப்பட்டேன்... எனக்கு எதுவுமே வேணும்... நான் எதில் வாழ்ந்திட்டேன்... எனக்கு எதிலுமே நம்பிக்கை இல்லே.... என் ஆம்படையான் இருப்பானுங்கிற நம்பிக்கை எனக்கு எப்பவுமே இல்லே...என்னவோ ஆடினேன்...அந்த ஆண்டாளு ஆடியதும் போதும் ஆண்டதும் போதும்... எனக்கு வேணும்...'' என்று சொல்லியபடி தனது கழுத்தைச் சுற்றிக் கிடந்த தாலிக் கயிற்றை அறுத்தெறிந்தாள்.

குலசேகரப்பட்டணம் தெருக்களிலே ''பால்... தயிர்...'' என விற்று ஆண்டுவந்த ஆண்டாளு தனது இன சம்பிரதாயப்படி ''வெள்ளை'' உடுத்திக் கொண்டு தனது எண்பதாவது வயதில் தனக்குத் தானே வைதவ்ய நியதியை ஏற்படுத்திக் கொண்டு தனது குடிலுக்குள் அமங்கலியாய் முடங்கிப் போனாள். சிறுமைப்பட்டுப் போன அந்தக் கிராமம் இந்தக் கிழவியின் தார்மீகக் கோபம் குறித்து என்ன சொல்வது எனப் புரியாத வியப்போடு மூக்கின் மேல் விரல் வைத்து நிற்கிறது.

இருள்
என்ன செய்யும்?
ஒளி தரும்
சிறுவிளக்கை
ஏற்றுங்கள்.




ஏழு ஆண்டுகளுக்கு
ரூ. 12,000 டெபாஸிட்
செய்யுங்கள்.
இந்தியன் பாங்க் அதை
ரூ. 32,400
ஆகப் பெருக்குகிறது.
உங்களுக்கும் உங்களைச்
சார்ந்தவர்களுக்கும் நீங்கள்
செய்யக்கூடிய பேருதவி இதுவே.
குறைந்த பட்சம் ரூ. 3,000
செலுத்தி ரூ. 8,100 பெறுங்கள்.
அல்லது ரூ. 30,000 செலுத்தி
ரூ. 81,000 பெறுங்கள்!
ரூ. 3,000த்தின் மடங்குகளாக
எந்தத் தொகையும் டெபாஸிட்
செய்யலாம்.

உங்கள் வாழ்வில் ஒளியூட்ட
இந்தியன் பாங்க்
புதிய திட்டம் ஒன்றை
அளிக்கிறது

# சுபிட்சா டெபாஸிட் திட்டம்

உங்களுக்கு அருகிலுள்ள
எமது கிளையை நாடுங்கள்.

**இந்தியன் பாங்க்** உங்கள் நலனுக்காகவே
உழைத்திடும் பாங்க்

(இந்திய அரசுக்கு முற்றிலும் உடைமையானது)
தலைமை அலுவலகம்: 17, வடக்கு கடற்கரைச் சாலை, சென்னை 600 001

FDS IB 2251 A TAM

# பொன்னியின் புதல்வர்



சுந்தா

## 6. திரைப் படத் தூய்மை

மலிவது நலியலாமோ?
நலிவது மலியலாமோ?

கல்கிக்கு வாய்த்த விசித்திரமான அனுபவங்களில் ஒன்று, சிறைக் கம்பிகளுக்குப் பின்னுலிருந்து ஒரு சினிமா விமரிசனம் எழுதியதாகும். சொந்தமாய்ப் பத்திரிகை தொடங்கும் முயற்சிக்கு, நண்பர் சதாசிவம் திருவையாற்றில் நீட்டிய கையைக் கல்கி ஏற்று, உடன்படிக்கை செய்து கொண்டார் அல்லவா? அந்தக் கையோடு நண்பரின் விடாப்பிடிக் கையில் அகப்பட்டு, அவருடன் தஞ்சாவூருக்கு விரைந்து, அங்கே அவர் பிரத்தியேகக் காட்சியாய் ஓட்டிக் காட்டிய, "சகுந்தலா" படத்தைப் பார்த்தார். "பிரமாதமாய் எடுத்திருக்கிறீர்கள்" என்று அவர் அதைப் பாராட்டிச் சொன்னர். "உங்கள் பாராட்டைக் கையோடு எழுதிக் கொடுங்கள்" என்று நண்பர் கேட்டார். அப்படிக் கையோடு எழுதிக் கொடுக்கக் கல்கிக்குக் கை ஒழியவில்லை. மாயவரம் திரும்பி சத்தியாக்கிரகம் செய்து தண்டனை அடைந்து சப்–ஜெயிலில் அடைபட்டதும்தான் அதற்கு நேரம் கிடைத்தது. சிறையின் தரையிலே காகிதத்தை வைத்துக்கொண்டு, "எங்கும் நிறைநாதப் பிரம்மம்" போன்ற பாடல்களின் நயத்தையும், சகுந்தலையாய் நடித்து அவற்றைப் பாடிய எம். எஸ். சுப்புலக்ஷ்மியின் சிறப்பான திறமையையும், மகள் ராதா பரதனுக நடித்த நடிப்பின் நேர்த்தியையும், பொதுவாகப் படத்தின் தரத்தையும் அவர் பாராட்டி எழுதினர். எழுதிய காகிதங்களை வெளியே காத்து நின்ற சதாசிவத்திடம் கம்பிகளினூடே கொடுத்தார். பிறகு திருச்சி சிறையில் இருக்கையில், தமது விமரிசனம் பல பத்திரிகைகளில் வெளியாகி இருந்ததைக் கண்டார்.

விடுதலையாகி வெளியே வந்தபோது, திருச்சியிலும் மாயவரத்திலும் சென்னையிலும், தமிழ்நாடு நெடுகிலும், எங்கும் நிறை நாதமாகச் சகுந்தலாப் பாடல்கள் ஒலித்துக் கொண்டிருந்ததைக் கல்கி கேட்டார். சகுந்தலாப் படமும் அங்கங்கே தொடர்ந்து ஓடிக் கொண்டிருந்தது. சென்னையில், "கினிமா சென்ட்ரல்" என்ற கொட்டகையில், அது ஐம்பது வாரம் ஓடியதைக் கொண்டாட, 1942 பிப்ரவரியில் பொன்விழா நடைபெற்றது. அந்த விழாவை அடுத்து, மீண்டும் ஒரு முறை அப்படத்துக்குக் கல்கி விமரிச

கல்கியில் வெளியான முதல் சினிமா விமர்சனம் - சகுந்தலை.



னம் எழுதி, அம்மாதம் 16ம் தேதியிட்ட தமது சொந்தப் பத்திரிகையின் 14வது இதழில் வெளியிட்டார். அதுவே கல்கிப் பத்திரிகையில் வெளியான முதலாவது சினிமா விமரிசனம்.

இரண்டாவது சினிமா விமரிசனம்—அப்போது "ஆடல் பாடல்" பகுதியில் தமிழிசைப் பிரசார ஆலாபனைகளும் விவாத ஆவர்த்தனங்களும் முழங்கிக் கொண்டிருந்த காரணத்தால் – மூன்று மாதங்களுக்குப் பிறகுதான் வந்தது. "மனோன்மணி" என்ற படம் பற்றிய அந்த விமரிசனத்தில் பழையபடி கர்நாடகத்தின் தனி ரகக் கேலி குதி போட்டது :

> ஆண் நடிகர்களில் சிலர், ஒவ்வொருவரே தனித் தனியாகத் திரையை அடைத்துவிடக் கூடியவர்களாய் இருக்கிறார்கள். இரண்டு பேர் சேர்ந்து விட்டால் திரையில் இடநெருக்கடிதான். கதாநாயகன் புருஷோத்தமனாக நடித்திருக்கும் ஸ்ரீ சின்னப்பா கொஞ்சம் பெரியப்பாவாகவே இந்தப் படத்தில் காட்சி அளிக்கிறார். ஆவேசம் வரும்போதெல்லாம் காலில் 'ஸ்பிரிங்' உள்ளவரைப் போல் அவர் குதித்துக் குதித்து (சென்னைத் தமிழில் எகிரி எகிரி) பேசுவது எதிர்பாராத ஹாஸ்யமாகிறது.
>
> (கல்கி இதழ் 20-5-'43)

இவ்விதமான கேலிக்கணைகளை, திரைப் படங்களின் ஆபாசக் காட்சிகளுக்கு எதிராக எய்வதற்கு, சில நாட்களில் தற்செயலாக ஒரு வாய்ப்பு உண்டாயிற்று.

யுத்தம் காரணமாய்ப் பல பொருள்களுக்கு ஏற்பட்ட பற்றாக்குறை, திரைப் படம் எடுப்பதற்கு வேண்டிய கச்சா பிலிம் விஷயத்திலும் ஏற்பட்டது..... ஆகவே, அதன் செலவை மட்டுப்படுத்துவதற்காக, எந்த ஒரு படத்தின் நீளமும் பதினோராயிரம் அடிக்கு மேல் இருக்கக் கூடாது என்பதாக அரசாங்கம் கட்டுப்பாடு விதித்தது. அந்த விதிக்கு உட்பட்டு முதலாவதாக வெளி வந்த கன்னட "அரிச்சந்திரா" படத்தைக் கல்கி விமரிசனம் செய்கையில், அந்தக் கட்டுப்பாட்டை வரவேற்றார் :

> சர்க்காரின் யுத்த காலச் சட்டங்களுக்குள்ளே மிகவும் நன்மையான சட்டம் இது என்று தேசமெங்கும் உள்ள அறிவாளிகள் அபிப்பிராயப்படுகிறார்கள். இரண்டு மணி நேரத்துக்கு மேல் சினிமாக் காட்சி பார்ப்பது ஜனங்களின் சுகாதாரத்துக்கு மிகவும் கேடு; நாளடைவில் கண்ணுக்கு நிச்சயம் தீமை விளைப்பது.
>
> பதினோராயிரம் அடியில் நல்ல படம் எடுக்க முடியாதா? படத்தின் நீளம் குறையக்

○ "எத்தனை அடி வேண்டும்?" சர்ச்சையில் வாசன் சார்பாகப் பேசவும் எழுதவும் செய்த வி.ஆர். ஸ்ரீனிவாசன், டி. எஸ். சொக்கலிங்கம்.





○ "உயர்தரமான படங்களைத் தூய்மையாகவும், ஜனரஞ்சகமாகவும் எடுப்பதில் வெற்றி கண்டவர்" என்று கல்கியால் போற்றப்பட்ட ஏ. வி. எம்.



○ திரு வாசனும் அவர் தயாரித்த ஔவையார் படத்தில் ஒரு காட்சியும்.





குறைய 'டெம்போ' அதிகமாகும் என்று சினிமா டெக்னிக் தெரிந்தவர்கள் சொல்வார்கள். அதாவது படத்தில் விறுவிறுப்பும் சுவாரஸ்யமும் அதிகமாகும் என்பது அவர்களுடைய கட்சி. (கல்கி இதழ் 1-6-43)

இவ்வாறு கல்கி எழுதிய அதே சமயத்தில், ஜெமினி அதிபரும் தென்னிந்திய சினிமா வர்த்தக சங்கத்தின் தலைவருமான எஸ். எஸ். வாசன், அந்தக் கட்டுப்பாட்டை எதிர்த்து, குறைந்தது 14 ஆயிரம் அடியாவது வேண்டும் என்று கோரிக்கை விடுத்தார். தமது கட்சிக்கு ஆதரவு தேடுவதற்காக, சென்னைப் பத்திரிகைகளின் ஆசிரியர்களை, ஜூன் 19ம் தேதியன்று ஒரு தேநீர் விருந்துக்கு வாசன் அழைத்து, தாம் கோரும் நீளம் ஏன் அவசியமானது என்பதை அவர்களிடம் விளக்கிச் சொன்னார். அந்த விருந்துக்கு அவர் கல்கியை அழைத்திருக்கமாட்டார்; அழைத்திருந்தாலும் கல்கி போயிருக்கமாட்டார். ராஜாஜி சம்பந்தமாயும் தமிழிசை இயக்கத்திலும் இருவரும் எதிரும் புதிருமாய் நின்ற சமயம் அது. முந்திய மனத் தாங்கல் வேறு.

தேநீர் விருந்தில் வாசனின் விளக்கத்தைக் கேட்டவர்களில் பலரும், அவருடைய கோரிக்கையை ஆதரித்துத் தத்தம் பத்திரிகைகளில் எழுதினார்கள். அவர்களில், ''சுதேசமித்திரன்'' ஆசிரியர் ஸி. ஆர். ஸ்ரீநிவாசனும், ''தினமணி'' ஆசிரியர் டி. எஸ். சொக்கலிங்கமும் முக்கியமானவர்கள்.

வாசனின் ஆனந்த விகடனிலும், ''சினிமா நெருக்கடி'' என்ற தலைப்புடன் அவருடைய கோரிக்கையை விளக்கி ஒரு கட்டுரை வந்தது.

அவற்றையெல்லாம் கல்கி படித்துவிட்டு, ''தமிழ் மகன்'' என்று புதிய புனைபெயர் ஒன்றைச் சூட்டிக் கொண்டு வாசனின் கோரிக்கையைத் தாக்கினார்:

''காந்தி மகான் சிறையில் இருக்கிறாரா? இருந்துவிட்டுப் போகட்டும். ஜனங்களை உணவுப் பஞ்சம் பீடித்திருக்கிறதா? நன்றாய்ப் பீடிக்கட்டும். அதற்கெல்லாம் இப்போது ஓர் அவசரமும் இல்லை. இந்த சினிமா அடிப் பிரச்னைதான் இப்போது பெரிய பிரச்னை. பெரும் கிளர்ச்சி செய்து இன்னும் 3000 அடி வாங்க வேண்டும். இல்லாவிட்டால் வந்தது ஆபத்து! எல்லாரும் கிளம்புங்கள்!'' என்று கூவி அழைக்கிறார் ஸ்ரீ எஸ். எஸ். வாசன்.....

(அவர்) என்ன சொன்னாலும் சரி, என்ன செய்தாலும் சரி, தமிழ்ப் படங்கள் 11,000 அடிக்குள் எடுக்கப்பட்டால்தான் தமிழ்ப் படத் தொழில் மேன்மை அடையும் என்று நான் நம்புகிறேன். ''தமிழ் மக்கள் மகா ரசிகர்கள்'' என்று ஸ்ரீ எஸ். எஸ். வாசன் கேலியாகச் சொல்லியிருந்த போதிலும், உண்மையில் தமிழர்கள் பரம ரசிகர்கள் தான். நிச்சயம் உயர்தரத் தமிழ்ப் படங்களை ஆதரிப்பார்கள். தமிழர்களுக்கு மட்டமான- நீளமான — படங்கள்தான் வேண்டும் என்ற பிரமை மிகவும் தப்பானது. படத்தின் நீளம் குறைந்தால் ஜனங்களுக்கு எவ்வளவோ நன்மை; பட முதலாளிகளுக்கும் நன்மை. நீளம் குறைந்தால் செலவு குறையும். படம் எடுக்கும் காலமும் குறையும். ஒரு படத்துக்கு இரண்டு படமாக எடுக்கலாம்.

(கல்கி இதழ்கள் - '43 ஜூலை 1, 10)

படத்தின் நீளம் குறைந்தால், அநாவசியமான காட்சிகளுடன் ஆபாசமான காட்சிகளும் தவிர்க்கப்படும் என்பது, கல்கியின் வாதங்களில் ஒன்று. இதன் தொடர்பாய் அவர், ஜெமினியின், ''பக்த நந்தனார்'' படத்தில் வந்த ஆபாசக் காட்சி ஒன்றைச் சுட்டிக் காட்டினார். அது என்ன என்பதை இங்கே பெயர்த்துப் பார்க்க வேண்டியதில்லை. அதில் ஓர் எலி சம்பந்தப்பட்டிருந்தது என்பதை மட்டும் குறிப்பாய்க் கொண்டு, எப்படி அந்தக் காட்சியைக் கல்கி தாக்கி எழுதினார் என்பதைக் கவனிப்போம்:

மிருகப் பிராயமான மனிதர்களைத் தவிர வேறு யாராவது இந்தக் காட்சியைப் பார்த்து ரசிக்க முடியுமா?...

பக்த நந்தனாரில் இந்தப் பரம ஆபாசக் காட்சியைச் சேர்த்ததனால், ஸ்ரீ எஸ். எஸ். வாசன் தம்மையும், தமிழ் டாக்கித் தொழிலையும் அவமானப்படுத்திக் கொண்டதோடில்லை; சேக்கிழாரை அவமானப்படுத்தியிருக்கிறார்; கோபாலகிருஷ்ண பாரதியை அவமானப்படுத்தியிருக்கிறார்; தமிழ் மக்களையும் முக்கியமாகப் பெண் குலத்தையும் அவமானப் படுத்தியிருக்கிறார். ஏன்? அந்த எலியைக்கூட அவமானப்படுத்தியிருக்கிறார்!

''பக்த நந்தனார்'' டாக்கியில் அந்த ஆபாசக் காட்சியை ஓர் எலி பார்க்குமானால் அதுகூட அவமானம் பொறுக்காமல் தற்கொலை செய்து கொண்டு சாகும்!

(கல்கி இதழ் 10-7-'43)

அடுத்தாற் போல் ஜெமினியின் ''மங்கம்மா சபதம்'' கல்கியின் கடும் தாக்குதலுக்கு உள்ளாயிற்று. அதில்

---



''எப்படி சார் இவ்வளவு கறுப்புப் பணம் சம்பாதிச்சீங்க?''
''எல்லாம் வியாபாரத்திலேதான்!''
''என்ன வியாபாரம்?''
''நரை முடி கறுக்கும் தைலம் பண்ணி விற்றேன்!'' —புஞ்யா

## 20 லட்சம் இதயங்களிலே...க்ளியர்டோன் பெயரே ஆயுட்கால உத்தரவாதம்.



### உற்பத்தித் தர உயர்வே க்ளியர்டோன் வீட்டுபயோக சாதனங்களின் ஆயுள்பலம்

மாறாத தரத்தை 20 லட்சம் இதயங்களிலே பதித்துள்ளன க்ளியர்டோன் சாதனங்கள், மின் விசிறிகள். காரணம், உற்பத்தியின் ஒவ்வொரு கட்டத்திலும், உற்பத்திக்கு முன்னும் பின்னும் உள்ள தரக் கட்டுப்பாடுகளே. பாருங்கள் அதன் பயனாக க்ளியர்டோனுக்கு மட்டுமே உள்ள சிறப்புக்களை.

**உன்னத நம்பிக்கை, மேம்பட்ட பாதுகாப்பு.**

மூலக் கூறுகளுக்குக் கறாரான பரிசோதனைகள் (டைப் டெஸ்ட்டிங், இன்வர்டு இன்ஸ்பெக்ஷன்) உற்பத்திக் கட்டங்களில் கண்காணிப்பு (இன்-பிராஸஸ் இன்ஸ்பெக்ஷன்): கண்டிப்பான தரக் கட்டுப்பாடு (க்வாலிடி கண்ட்ரோல்): இன்சுலேஷன், பிரஷர், உயர் உஷ்ணப் பரிட்சைகள் ஆகியவை, நம்பிக்கைக்கும் பாதுகாப்புக்கும் உறுதி தருகின்றன.

**ஒவ்வொரு தேவைக்கும் ஒரு சாதனம்.**

மின்சார இஸ்திரிப் பெட்டிகள், பிரஷர் குக்கர்கள் முதல் வாட்டர் ஹீட்டர் வரை, டோஸ்ட்டர், ஓவன்கள் முதல் குக்கிங் ரேஞ்சுகள் வரை— பலதரப்பட்ட க்ளியர்டோன் வீட்டுபயோக சாதனங்களைப் பார்வையிடுங்கள் கிட்டத்திலுள்ள விற்பனைக் கடையிலே.

திரேஷனல் ரேடியோ & எலக்ட்ரானிக்ஸ் கோ. லிட்.
பம்பாய் • கல்கத்தா • டெல்லி
சென்னை • இந்தோர்
சிகந்தராபாத் • பெங்களூர்
கான்பூர்

**Kleertone**

**க்ளியர்டோன் வீட்டுபயோக சாதனங்களின் படைப்பகம்**

**உங்கள் பணத்திற்குப் பொறுப்பு — எங்கள் பெயரின் மதிப்பு!**

Creative Unit-A 1983-Tam



''ஏம்மா! இந்த ரகசிய இரும்புப் பீரோவுக்குச் சாவி எங்கே இருக்குது? எடுங்க!''
''சாவி என் கணவர் கிட்டே இருக்கு சார்!''
''அவர் எங்கே இருக்கிறார்?''
''இந்தப் பீரோவுக்குள்ளேதான்!''

—தாஜா

கதையையும் உத்தியையும் பற்றிய பகுதிகளை மட்டும் சுருக்கமாய்ப் பார்த்தால் போதுமானது :

நமது பழந்தமிழ் நாட்டில் எத்தனையோ வீர மன்னர்கள் இருந்திருக்கிறார்கள். அவர்கள் தேச தேசமெல்லாம் சென்று வீரப் போர் புரிந்து வெற்றி பெற்றிருக்கிறார்கள். அவர்களுடைய சீரும் சிறப்பும் வளர்ந்தோங்கியது போல் கோயில்களும் கோபுரங்களும் வானை அளாவி எழுந்தன.

அத்தகைய தமிழ் நாட்டிலே சோதாவும், சோம்பேறியும், தூர்த்தனுமான ஒரு ராஜகுமாரன் இந்தக் கதையில் கதாநாயகனாக வருகிறான். அவனுக்காக ஊரில் உள்ள இளம் பெண்களை வேவு பார்ப்பதற்கு ஓர் அடப்பக்காரன் இருக்கிறான். இந்த இருவரும்தான் இப்படத்தில் முக்கிய ஆண் கதாபாத்திரங்கள். ராஜா மந்திரி முதலியவர்கள் வெகுமட்டமானவர்கள். நமது பழந் தமிழ் நாட்டில் இப்படிப்பட்டவர்கள்தான் இருந்தார்கள் என்றால், ''நாம் எதற்காக இந்த நாட்டில் பிறந்தோம்'' என்று தமிழ் மக்கள் வெட்கப் படவேண்டும்....

கதாநாயகன் ஏழெட்டுப் பெண்களை வைத்துக்கொண்டு 'உ' விளையாட்டு விளையாடுகிறான். பார்க்க மகா ஆபாசமாக இருக்கிறது. பிறகு, அப்பெண்களைக் குனியவைத்துப் பச்சைக் குதிரை தாண்டுகிறான். அருவருப்பின் எல்லை....

ஒளிப்பதிவு, ஒலிப்பதிவு எல்லாம் இப்படத்தில் உயர்தரமாய் இருக்கின்றன. காட்சி ஜோடனைகளும் அப்படியே. தூண்களும் மச்சுப் படிகளும் பிரமாதம். ஆங்காங்கு டைரக்ஷன் திறமையும் காணப்படுகிறது. ஆனால், இவ்வளவும் விழலுக்கு இறைத்த நீர்தான். இம்மாதிரி தமிழ் நாட்டையும், தமிழ்ப் பெண் குலத்தையும் அவமானப் படுத்தும் படத்துக்கு அல்லாமல், உயர்ந்த இலட்சியமுள்ள நல்ல படத்துக்கு இந்த டெக்னிக் திறமை பயன்பட்டிருந்தால் நன்றாய் இருந்திருக்கும்.

(கல்கி இதழ் 20-8-'43)

மங்கம்மா கதையையும், பின்னர் தாசி அபரஞ்சி கதையையும் படம் எடுக்க வாசன் தேர்ந்தெடுத்தது பற்றி, பட நீளக் கட்டுப்பாடு விவாதத்தின் போதே கல்கி குறிப்பிட்டு, அவ்வித ஆபாசக் குப்பைக் கதைகளை ஏன்தான் தேடிப் பிடிக்கிறாரோ என்று கேட்டு வன்மையாய்க் கண்டித்திருந்தார். அந்த விவாதத்தில் கல்கி தொடுத்த தாக்குதலை ஸி. ஆர். சீனிவாசன் தமது பத்திரிகையில் குறிப்பிட்டு, வாசன் மீது கல்கிக்கு உள்ள விரோதமே அதற்குக் காரணம் என்று எழுதினார். ''ஸ்ரீ வாஸனுக்கும் கல்கிக்கும் முன்பு பரிமளித்த அன்பின் அளவுதான் இன்று ஏற்பட்டுள்ள விரோதத்தின் பரிமாணம்.''

அதற்குக் கல்கி கூறிய பதில் :

நான் 'உதிப்பதற்கு முன்பிருந்தே' சேவை செய்து வரும் முதிர்ந்த தமிழ்த் தினசரியின் ஆசிரியர், இவ்விதம் சொந்த விஷயங்களைக் கொண்டு வந்து விவாதத்தில் புகுத்துவது எனக்கு மிகுந்த துக்கத்தை அளிக்கிறது. ஸ்ரீ ஸி. ஆர். சீனிவாசனே இவ்விதம் வழி காட்டுவது என்றால், தமிழ்ப் பத்திரிகை உலகின் துரதிர்ஷ்டம் என்றுதான் சொல்ல வேண்டும்.

உண்மையில் ஸ்ரீ வாஸனிடம் நான் அபார அன்பு கொண்டதுமில்லை; இப்போது விரோதம் கொண்டிருக்கவும் இல்லை.

ஸ்ரீ எஸ். எஸ். வாசனிடம் எனக்கு முன்னம் மதிப்பு இருந்தது; இப்போது இல்லை. அதற்கு அவருடைய செய்கைகள்தான் காரணம். ஆனால், இந்த மனநிலைக்கும், பிரஸ்தாப விவாதத்துக்கும் யாதொரு சம்பந்தமும் இல்லை. சொந்த நன்மை தீமைகளையோ விருப்பு வெறுப்புக்களையோ பொது விவாதத்தில் கலக்கும் வழக்கத்தை நான் அடியோடு வெறுக்கிறேன். (கல்கி இதழ் 20-7-'43)

வாசன் ஆரம்பத்தில் எடுத்த படங்களை வரிசையாய்த் தாக்கிக் கொண்டு வந்த கல்கி, பின்னர் அவருடைய ''சந்திரலேகா''வைப் பிரமாதமாய்ப் புகழ்ந்து எழுதினார். அந்தப் படத்தில் உயரிய இலட்சியம் ஏதும் இல்லாவிட்டாலும், தூய முறையில் மக்களுக்குக் களிப்பூட்டுவது என்ற நோக்கம் அதில் நன்கு நிறைவேறி இருக்கிறது என்பது அவருடைய பாராட்டு. தொடக்கம் முதல் இறுதி வரை அந்தப் படத்தின் வெற்றி டைரக்டரின் திறமையினால் ஏற்பட்டதாகும் என்றும், ''சந்திரலேகாவின் டைரக்டர் ஸ்ரீ எஸ். எஸ். வாசன்தான் என்பது அவருக்கு இரு மடங்கு புகழ் தருவதாகும்'' என்றும் மெச்சி எழுதினார். அப்படி எழுதியதோடு, வாசனின் படத்தைத் தமது பத்திரிகையின் 3–7–49 இதழின் அட்டையில் வெளியிட்டு அவரைக் கௌரவித்தார்.

சந்திரலேகாவுக்கு அடுத்தாற்போல் வாசன் வெளியிட்ட ''அபூர்வ சகோதரர்கள்'' என்னும் படத்தை, ''மற்

ஜெருகு வெற்றி'' என்று கல்கி கொண் டாடி எழுதினர் ;

'செக்ஸ் அப்பீல்' என்று சொல்லப்படும் ஆபாசக் காட்சிகளும், காமிக்குகள் என்ற பெயரால் வழங்கும் கீழ்த்தர நிகழ்ச்சிகளும் இருந்தால்தான் நம்முடைய நாட்டில் படங்கள் வெற்றிகரமாக ஓடும் என்று 'புரொட்யூஸர்கள்' என்று சொல்லப்படும் வித்தை மனிதர்கள் முன்பெல்லாம் கூறுவ துண்டு. இதற்காக அவர்கள் நம்முடைய தேவர் தேவியர்களைத் திரைகளிலே கொண்டு வந்து படாத பாடு படுத்தி வைப்பார்கள். பரமசிவனுடைய நெற்றியிலே நாமத்தைப் போடுவார்கள். மகாவிஷ்ணுவுக்கு நீண்ட தாடியைக் கொடுப்பார்கள்....

இன்னும் இவர்கள் பாமர மக்களுக்குப் பிடிக்கும் என்று சொல்லிக் கொண்டு படங் களிலே புகுத்திய அக்கிரமங்களுக்குக் கணக்கே இல்லை. பெண்டாட்டியின் கையில் விளக்குமாற்றைக் கொடுத்து புருஷனை அடிக் கச் சொல்லுவார்கள். படுக்கை அறைக் கட்டிலின் கீழே சோர நாயகனை ஒளித்து வைப்பார்கள். உயிரோடு தவளைகளை விழுங் கச் செய்து ''இது ஹாஸ்யம்! சிரியுங்கள்'' என்பார்கள்.

இவையெல்லாம் ஆபாசமாக இருக்கின் றனவே, நம்முடைய பண்பாட்டுக்கும் பெரு மைக்கும் இழிவு தேடுகின்றனவே என்று சொன்னால், ''உங்களுக்கு என்ன? நீங்கள் இப்படித்தான் சொல்லுவீர்கள். இந்தமாதிரி காட்சிகள் இருந்தால்தான் பாமர ஜனங்கள் படம் பார்ப்பார்கள்; நாங்கள் போட்ட பணம் திரும்பக் கிடைக்கும்!'' என்று டாக்கி முதலாளிகள் பதில் சொல்வார்கள்...

அப்படிப் பேசியவர்களுடைய கட்சி எவ் வளவு அபத்தமானது என்பதை ''அபூர்வ சகோதரர்கள்'' படம் நிரூபித்திருக்கிறது. ஒருவித ஆபாசமும் இல்லாமல் படம் எடுத்தாலும் மற்ற நல்ல அம்சங்கள் பொருந்தி இருந்தால் பொதுமக்கள் (பாமர ஜனங்கள் உட்பட) பார்ப்பார்கள், படம் வெற்றிகரமாய் ஓடும் என்பதற்கு ''அபூர்வ சகோதரர்கள்'' ஒரு சிறந்த அத்தாட்சி யாகும். (கல்கி இதழ் 27-11-'49)

அடுத்தடுத்து வந்த இந்த இரண்டு பாராட்டுக்களைக் கண்டவர்களில் சிலர், ''வாசனுடன் கல்கி 'சேர்த்தி' ஆகிவிட் டார், அதனால்தான்.....'' என்றார்கள். இன்னும் சிலர், ''கல்கியும்கூட ஊரோடு ஒத்துப் பாடத் தொடங்கி விட்டார்'' என்று சொன்னார்கள். அந்த இரண்டு கூற்றுக்களும், 1952 தொடக்கத்தில் சென்னையில் நடந்த சர்வதேச சினிமாவைப் பற்றி கல்கி எழுதிய கட்டுரையின் மூலம் ஆதார மற்றுப் போயின. அதில் அவர், தாம் பார்த்த வெளிநாட்டுப் படங்கள் எப்படியெல்லாம் மனிதனின் உயர் வைப் போற்றின என்பதை எடுத்துச் சொல்லி விட்டு, ஜெமினியின் படம் ஒன்று அவற்றுக்கு நேர்மாறாக இருந்த தைச் சுட்டிக்காட்டினர் :

சமீப காலத்தில் இந்தியா தேசத்தையே ஒரு கலக்குக் கலக்கிவிட்ட படங்களில் ஒன்று ''சம் சாரம்''. மகத்தான வெற்றி; பிரம்மாண்ட மான வசூல், படத்தில் வெளியாகியிருக்கும் நடிப்புத் திறமையும் அபாரம். கதாநாயகி (புஷ்பவல்லி) அற்புத உணர்ச்சியுடன் சில இடங்களில் நடித்திருக்கிறார்.

ஆனால் விஷயம் என்ன? ஒரு குடும்பஸ்தன் குடும்பக் கஷ்டங்களையும் குடும்பச் சச்சரவு களையும் தாங்க முடியாமல் வீட்டை விட்டு ஓடிப்போகிறான். தாலி கட்டிய பெண்டாட் டியைப் பிரசவ ஆஸ்பத்திரியில் விட்டு விட்டு ஓடிப்போகிறான்! அதைவிடத் தற்கொலை செய்து கொண்டு அவன் செத்திருக்கலாம். அதற்கும் தைரியமில்லை. வீட்டையும் ஊரை யும் விட்டு ஓடிப்போய்ப் பிச்சை எடுத்துப் பிழைக்கிறான். இந்திய ஆண் குலத்துக்கு எத்தனை பெருமை!

அவன் பெண்டாட்டி பிள்ளைகள் இடம் பெயர்ந்து அலைகிறார்கள். ஒரு மோட்டார் ஷெட்டில் மழைக்கு ஒதுங்குகிறார்கள். மோட் டார் சொந்தக்காரன் மோட்டாருடன் வரு கிறான். ''நீங்கள் நனைந்து நாசமானால் எனக் கென்ன? என் மோட்டார் நனையக் கூடாது!'' என்று அவர்களை விரட்டி யடிக்கிறான். இந்திய மக்களின் தயாள குணம் — மனிதத் தன்மை— எப்படி உயர்த்தப்படுகிறது!

குழந்தைகளுக்குப் பிச்சை எடுக்கத் தாயார் கற்றுக் கொடுக்கிறாள். பாட்டுப் பாடிப் பிச்சை எடுக்கக் கற்றுக் கொடுக்கிறாள்! குழந் தைகள் ''அம்மா! பிச்சை போடுங்கள்!'' என்று பாடிக் கொண்டு பிச்சை எடுக்கின்றன. ''இந்தப் பாட்டு மிக இனிமையாய் இருக் கிறது!'' என்று ஒரு பிரசித்தமான பத்திரிகை விமரிசனமும் எழுதியிருக்கிறது. அந்த இனி மையில் இடி விழ!

கடைசியில் எல்லாம் சுபமாக முடிகிறது. எப் படி? உழைப்பினாலா? விடாமுயற்சியினாலா? அறிவுத் திறமையினாலா? தயாள குணத்தி னாலா? இல்லை! குருட்டு அதிர்ஷ்டத்தினால்!

(கல்கி இதழ் 24-2-52)

அடுத்த வருடமே, கல்கியின் முழுப் பாராட்டுக்கு உரித்தான 'ஒளவையார்' படத்தை வாசன் எடுத்தார். அதை எப்படி கல்கி புகழ்ந்தார் என்பதை, ஏற் கனவே, ''சிவகாமியின் ஜதிகள்'' என்ற அத்தியாயத்தில் பார்த்தோம்.

வாசனை அடுத்துப் பெரிய படாதிபதி யாய்ப் பரிணமித்தவர் ஏ. வி. மெய்யப் பன். 1974ல் வெளியான ''எனது வாழ்க்கை அநுபவங்கள்'' என்ற அவ



''வெள்ளைப் பணமும் கறுப்புப் பணமும் நிறைய இருக்கு.... எப்படிச் செலவு பண்றதுன்னுதான் தெரியல்லே....''

''பிளாக் அண்ட் வொயிட்டிலே ஒரு சினிமாப் படம் எடுக்கலாமே!'' —புஷ்பா

என் நண்பர் ஒரு வேடிக்கை ஆசாமி. சிறு பிள்ளைகளைக் கூப்பிட்டு மனக் கணக்குப் போடுவார். ''ஒரு ரூபாய்க்கு ஒரு பழம், இரண்டு ரூபாய்க்கு?'' இப்படியே மூன்று கணக்கு களைப் போட்டுவிட்டுத் திடீரென்று ''ஒன்றாம் வகுப்பு மச்சானுக்கு ஒரு நல்ல; இரண்டாம் வகுப்பு மச்சானுக்கு?'' என்பார். சிறுவர் சொல்லும் பதில்தான் இப்போது உங்களுக்கும் புரிந்திருக்குமே!

இ. கை. சே.



---

ருடைய நூலில், கல்கியைப் பற்றிய சுவையான குறிப்பு ஒன்று காண்கிறது:

''நான் டைரக்ட் செய்த முதல் படம்—சபாபதி; முழுக்க முழுக்க காமெடி பிக்சர்... கல்கி இந்தப் படத்தைப் பாராட்டி இரண்டு பக்கம் விமரிசனம் எழுதியிருந்தார். (அதில் நடித்த) சாரங்கபாணியை அவர் தனியாகச் சந்தித்தபோது, ''நிஜமாகவே இது மெய்யப்ப செட்டியார் டைரக்ட் செய்த படம் தானு? ரொம்பப் பேஷாக இருந்தது'' என்று விசாரித்தாராம். கல்கி அந்தப் படத்துக்குச் சிறப்பாக விமரிசனம் எழுதினர் என்பதை நினைக்க நினைக்க இப்போதும் பெருமையாக இருக்கிறது.

வைஜயந்தி மாலாவுக்கு நட்சத்திரப் புகழ் அளித்த ''வாழ்க்கை'' என்னும் படத்தை 1949ல் ஏ.வி. எம். திரையிட்டபோது, அதற்குக் கல்கி, ''சபாபதி'' படத்தை நினைத்துப் பார்த்துக் கொண்டே விமரிசனம் எழுதினர்:

ஸ்ரீ ஏ. வி. மெய்யப்ப செட்டியார் சினிமா உலகில் பிரவேசித்ததிலிருந்து, உயர்தரமான படங்கள் கொண்டு வருவதையே இலட்சியமாக வைத்துக் கொண்டிருக்கிறார். ''சபாபதி'' என்னும் படத்தை நாம் மறக்கவே முடியாது. அதில் அத்தனை உயர்தர ஹாஸ்யமும் நடிப்புத் திறமையும் ததும்பி இருந்தன....

''வாழ்க்கை'' மிக உயர்தரமான படம்; குற்றமற்ற நகைச்சுவை ததும்பும் படம். கொஞ்சம் கூட ஆபாசக் கலப்பில்லாத விரசமில்லாத, தூய்மையான படம்; விரு விருப்பான கதைப் போக்கு அமைந்த படம்; குதூகலமும் சோகமும் சகடக் கால் போல் மாறி மாறி வரும் உணர்ச்சி மயமான படம், ஆடல் பாடல் நிறைந்த படம்; நடிப்புத் திறமையும் டைரக்ஷன் திறமையும் நன்கு வெளியாகும் படம், உயர்ந்த இலட்சியங்களைக் கொண்ட சிறந்த போதனைகள் வாய்ந்த படம்; இவ்வளவு நல்ல அம்சங்களோடு சகல ஜனங்களையும் திருப்தி செய்யக் கூடிய கவர்ச்சிகரமான படமாகவும் ''வாழ்க்கை'' அமைந்திருக்கிறது. (கல்கி இதழ் 15-1-50)

'' வாழ்க்கை '' அமோக வெற்றி அடைந்ததை அடுத்து, ஏ.வி.எம்மின் படத்தைத் தமது பத்திரிகையின் 5—11—50 இதழின் அட்டையில் கல்கி வெளியிட்டார். அதற்கான விளக்கக் குறிப்பில், ''உயர்தரமான படங்களைத் தூய்மையாகவும் ஜனரஞ்சகமாகவும் எடுப்பதில் வெற்றி கண்டவர் அவர்'' எனப் புகழ்ந்து எழுதினர்.

ஏ.வி.எம். போன்றோர் நல்ல படங்களை எடுத்த போதிலும், பொதுவாக சினிமாவானது, மக்களின் நல்லற ஒழுக்கத்துக்குக் கேடானதே என்பது ராஜாஜியின் கருத்து. அந்தக் கருத்தை அவர் பொதுக்கூட்டம் ஒன்றில், தமக்கு இயல்பான உபமான விளக்கங்களுடன் வெளியிட்டு,''சினிமாவுக்குப் போகாதீர்கள்'' என்று நன்மதி கூறினர். அது குறித்து அங்கங்கே படாதிபதிகளும், சினிமாக் கலைஞர்களும் ரசிகர்களும் ஆட்சேபக் குரல் எழுப்பினர்கள்.

அவர்களைக் கல்கி தக்கபடி சமாதானப்படுத்தினர்:

ராஜாஜியினுல் கூட முடியாத காரியம் இந்த உலகத்தில் ஒன்று உண்டென்றால், அது நம் ஜனங்களை சினிமாப் பார்க்கப் போகாமல் தடுத்து நிறுத்துவதுதான். நகையை விற்று வரி கொடுத்தாலும் கொடுப்பார்கள்; சினிமாப் பார்க்கப் போகாமல் இருக்க மாட்டார்கள். ஆகையால், படாதிபதிகளும் நட்சத்திரங்களும், ரசிகர்களும் வீண் பீதி அடைய வேண்டியதில்லை.

''ராஜாஜி இப்படிச் சொல்லிவிட்டாரே!'' என்று கோபமோ, கவலையோ படுவதற்குப் பதிலாக ராஜாஜி ஏன் அப்படிச் சொன்னர் என்று சிந்தித்துப் பார்ப்பது உபயோகமாக இருக்கும். ராஜாஜி போன்றவர்கள் ''சினிமாப் பார்க்கப் போங்கள்'' என்று சொல்ல முன்வரும்படியான நல்ல படங்கள் வருவதற்கு முயற்சி செய்ய வேண்டும்.

(கல்கி இதழ் 8-6-52)

இதற்கு ஓராண்டுக்குப் பிறகு, ''பொன்னி'' பொங்கல் மலருக்காகப் பூவை. எஸ். ஆறுமுகம் கண்ட பேட்டியில், இந்த விஷயத்தின் தொடர்பாகக் கல்கி சொன்னதின் சாரம் :

ராஜாஜியின் கருத்துக்களைப் பொதுவாக மதிப்பவன் நான். ஆனல் சினிமாப் பற்றிய அவருடைய கருத்தை மட்டும் நான் ஒப்புக் கொள்ளவில்லை; மக்களின் ஒழுக்கம் கெடக் கூடாது என்பதுதான் அவருடைய கவலை. அவருடைய கருத்தை நான் ஏற்கா விட்டாலும், அவர்மீதுள்ள மரியாதை காரணமாக இரண்டு உறுதிகள் செய்து கொண்டேன். ஒன்றின்படி சிறிது காலம் படம் ஏதும் பார்க்காமல் இருந்தேன். இன்னென்றின்படி, சினிமாத் தணிக்கை ஆலோசனைக் குழுவிலிருந்து விலகிக் கொண்டேன். (தொடரும்)

# எனக்கென்று ஒரு நாள்



சாரதி

'**வை**கறைப் பொழுதின் சுகந்தமான இனிமையில் புள்ளினங்கள் தங்கள் தங்கள் கூடுகளைவிட்டு வெளியே இரை தேடப் புறப்பட்டன' என்று இலக்கிய நயத்துடன் வர்ணிக்கலாம் போன்று மனத்தினில் ஓர் எழுச்சி தோன்றியது.

நான் இன்றைக்கு ஆபீசுக்கு லீவு. 'காலையில் எழுந்ததிலிருந்து எனக்கு 'டயேரியா' வாக இருப்பதால் இன்று ஒருநாள் மட்டும் எனக்கு லீவு கொடுக்குமாறு தாழ்மையுடன் கேட்டுக் கொள்கிறேன்' என்று லீவு லெட்டர் எழுத ஆரம்பித்து, அதில் 'டயேரியா' வுக்குச் சரியா 'ஸ்பெல்லிங்' தெரியாத காரணத்தால் 'டிக்ஷனரி'யைத் தேடி அது கிடைக்காமல், நாலு பேரிடம் கேட்டு, நாலு பேரும் நாலு வித 'ஸ்பெல்லிங்'கை சொல்ல எது சரியானது என்று புரியாமல் தத்தளித்து, அந்த லீவு லெட்டரைக் கிழிந்தெறிந்துவிட்டு, 'இன்று காலையில் இருந்து தீவிரமான உடம்பு வலியும் இலேசான ஜுரமும் இருப்பதால் இன்று மட்டும் லீவு கொடுக்கும்படி கேட்டுக் கொள்கிறேன்' என்று புதிதான ஒரு லீவு லெட்டரை எழுதி, எடுத்துக் கொண்டு, கூட வேலை பார்ப்பவர்கள் யாராவது தென்படமாட்டார்களா — அதுவும்கூட வேலை பார்க்கும் பெண் எவளாவது தென்பட்டால் லீவு லெட்டரைக் கொடுத்தனுப்பும் சாக்கில் நாலு வார்த்தைகள் பேசுவதற்கு 'சான்ஸ்' கிடைக்கும் என்று அற்பத்தனமாக ஆசைப்பட்டு ரயில்வே ஸ்டேஷனில் காத்துக் கொண்டு — ஆக இதற்கெல்லாம் இடம் கொடுக்காமல் கன கச்சிதமாக நேற்றைய தினமே லீவு 'அப்ளை' பண்ணி 'சாங்ஷன்' வாங்கிவிட்டேன். 'எமெர்ஜென்ஸி' சமயத்தில் அநாவசியமான தொந்தரவு எதற்கு என்ற பயம் வேறு. நான் லீவு போட்டது துணிச்சலான ஒரு நல்ல காரியத்துக்கு. அதில் அநாவசியமான சங்கடங்களைத் தவிர்க்கலாமே என்ற நினைப்பே எனது முன்னுாக்கிரதைக்கு முக்கிய காரணம்.

''வைகறைப் பொழுது' 'புள்ளினம்' என்று அழகாக ஆரம்பித்து 'டயேரியா' 'உடம்பு வலி' என்று சம்பந்தா சம்பந்தம் இல்லாமல் பிதற்றுவதாக யாரும் தயவுசெய்து எண்ணிவிட வேண்டாம். ஆபீசுக்கு லீவு என்ற இதமான எண்ணமும், அன்றைக்கு நடக்கப் போகும் நிகழ்ச்சிகளின் சுவையான வண்ணக் கோலங்களும் மனத்தில் ஒரு வித சுகானுபவத்தை ஊற்றெடுக்கச் செய்ய, அந்தக் காலை எட்டரை மணியின் சற்று முற்றிய இளம் வெய்யிலையும் பொருட்படுத்தாது மாடியில் பால்கனியில் நின்றுகொண்டிருந்தேன்.

வழக்கமாக அந்த நாளாவது வீட்டு ரயில்வேக்காரர் தான் தினமும் 'போணி' பண்ணுவார். நான் குறிப்

பிடுவது வியாபாரத்தில் வரும் 'போணி'யைப் பற்றி அல்ல. எங்கள் தெருவில் வசிக்கும் உத்தியோகம் பார்க்கும் 'கம்யூனிடி'யில் ஆபீசுக்குக் கிளம்புவதில் அவர்தான் தினமும் 'போணி' பண்ணுவார். இன்று மட்டும் விதிவிலக்கல்ல. இதோ கிளம்பி விட்டார். மணி சரியாக எட்டே முக்கால் என்று அர்த்தம். அடுத்ததாக அந்த 'வால்டாஸ்' ஹிப்பி கிளம்பிவிட்டான். நெற்றியின் முன்னால் விழும் தலைமயிரைக் 'கோதி'க் கொள்வதற்கே தன் நேரத்தையெல்லாம் செலவிடும் அவன் 'வோல்டாஸி'ல் என்னதான் வேலை செய்வானோ? தெய்வத்துக்குத்தான் வெளிச்சம். சாயங்காலம் ஆபீசிலிருந்து வந்ததும் வீடு ஒரு குருக்ஷேத்திரமாக மாறாமல் தடுப்பதற்காக முன்னெச்சரிக்கையாக வீட்டின் சகல காரியங்களையும் காலை நாலு மணிக்கு எழுந்து செய்து முடித்துவிட்டு அரைகுறையாக — தலையைத் 'தொள தொள' வென்று வாரி ஒரு 'பிச்சோடா' போட்டுக் கொண்டு மாமியாரிடம் உத்தரவு வாங்கிக் கொண்டு கிளம்பி விட்டாள் பக்கத்து வீட்டு வனஜா. அவள் ஜி. பி. ஓ.வில் வேலை பார்க்கிறாள். அவள் கணவன் பிச்சுமணிக்கு வேலை இல்லை. வனஜாவின் சம்பாத்தியத்தில்தான் குடும்பம் ஓடுகிறது என்று கேள்வி. அது நிதர்சனமான உண்மையும் ஆகும்.

அவர்களுக்கெல்லாம் இன்று சாதாரணமான மற்றொரு தினம். ஆனால் எனக்கு இன்று புதுமையான நாள். அதனால்தான் நான் பார்க்கிற சாதாரண நிகழ்ச்சியில் எல்லாம் ஏதோ ஒரு புதுமை தெரிகிறது. அதனால்தான் வழக்கப்படி ஆபீசுக்குக் கிளம்பும் இவர்களெல்லாம் இரை தேடப் புறப்படும் 'வைகறை'ப் பொழுதில் காணும் புள்ளினங்கள் போல் தோன்றுகிறார்கள் போலும்!

இதோ எதிர்த்த வீட்டு வித்தியா கிளம்பி விட்டாள். மேகம் சற்று விலகவும் வெயில் 'சுரீர்' என்று உறைத்தது. வித்யா என்னை நிமிர்ந்து பார்த்துவிட்டு ஒரு பரிச்சயமான புன்னகையை— புன்னகை என்று சொல்வதைவிடப் புன்னகையின் சாயலை—தன் முகத்தில் தவழவிட்டபடி சென்றாள். அவள் அந்தக் குடும்பத்தில் இரண்டாவது பெண்..... எல். ஐ. சி.யில் வேலை. நல்ல நிறத்துடன் பார்ப்பதற்கு லட்சணமாக இருப்பாள். நான் முப்பத்திரண்டு வயதுப் பிரம்மச்சாரி என்பதனால் அப்படித் தோற்றம் அளிக்கிறாள் என்று எண்ணிவிட வேண்டாம்.... உண்மையாகவே லட்சணமாக இருப்பாள். ஆனால் முகத்தில் ஒருவித விரக்தி கலந்த சோகம் எப்போதும் படர்ந்திருக்கும். கல்யாணம் ஆகாத இருபத்தேழு வயதுப் பெண்ணின் முகத்தில் விரக்தியும் சோகமும் எதற்காகப் படர்ந்திருக்கும் என்று நான் புதிதாகச் சொல்லத் தேவையில்லை. வித்யாவுக்கு ஏன் இன்னும் திருமணம் ஆகவில்லை என்ற கேள்வி எழுந்தால் வித்யாவின் அக்கா ரம்யாவுக்கே இன்னும் திருமணம் ஆகவில்லை என்பதுதான் காரணம். என்னடா இது! அவர்கள் வீட்டுக்கும் திருமணம் என்ற வார்த்தைக்கும் சம்பந்தமே கிடையாதா என்று எண்ணிவிடக் கூடாது. ஏன் இல்லாமல்? முப்பத்திரண்டு வருடங்களுக்குமுன் அவர்களுடைய அப்பாவுக்கும் அம்மாவுக்கும் திருமணம் நடந்திருக்கிறதே! முப்பது வயது ரம்யா, இருபத்து ஏழு வயது வித்யா, இருபத்து நாலு வயது பிரியா ஆக மூன்று பெண்களுக்குத்தான் இனி திருமணம் நடக்க வேண்டும். இந்த மூன்று பெண்கள் பிறந்து எட்டு ஆண்டுகள் கழித்து ஜனனம் செய்து செல்லமாய் வளைய வந்து தனது பதினாறாவது வயதில் கஷ்டப்பட்டு ஒன்பதாம் வகுப்பை எட்டிப் பிடித்திருக்கும் கடைக்குட்டி ரமேஷ் படிப்பை முடித்துவிட்டு(?) உத்தியோகம் போக ஆரம்பித்த பின்னர் பெண்களின் கல்யாணத்தைப் பற்றிச் சிந்திக்க ஆரம்பிக்கலாம் என்பது பெற்றவர்களின் எண்ணம் என்பது என் தீர்மானம். அதற்கு ருசுவும் இருக்கிறது.

பெண்களுடைய தகப்பனார் இருக்கிறாரே, அவர் ரொம்பவும் தங்கமான மனுஷ்யர். ரிடையர் ஆவதற்கு இரண்டு வருடங்களுக்கு முன்னால் கடனில் அவர் ஒரு வீட்டைக் கட்டி விட்டதனால், ரிடையர் ஆன போது வர வேண்டிய பிராவிடெண்ட் பண்ட், கிராசுடி ஆகியவற்றைக் கடனுக்குப் பிடித்துவிடவும் கையை இப்படியும் அப்படியும் ஆட்டிக் கொண்டு வெறுமனே வீட்டில் வந்து 'ஜம்' மென்று உட்கார்ந்து விட்டார். வேளைக்குக் கும்பகோணம் வெற்றிலை, சீவல், — வாசனைப் புகையிலை போட்டுக் கொண்டு விச்ராந்தியாக இருப்பார். 'பகவத்' சங்கல்பம் இருந்தால் பெண்களுக்குக் காலாகாலத்தில் தானே கல்யாணம் ஆகிவிடும் என்கிற தீவிரமான தெய்வ பக்தி அவருக்கு உண்டு!

அவருடைய பார்யாளும் ரொம்பத் தற்காலத்து மனுஷி. நடைமுறையில் சாத்தியக் கூறான விஷயங்களையே சிந்திப்பவள். எங்கே ரம்யாவுக்கு இடம் பார்க்க ஆரம்பித்தால் வித்யாவுக்கும் திருமணம் செய்ய நிர்ப்பந்தம் வந்துவிடுமோ, வித்யாவுக்கும் குதிர்ந்துவிட்டால் சீனியாரிடி லிஸ்டில் ப்ரியா முதலில் வந்து தனக்கும் கல்யாண வயதாகிவிட்டது என்று ஆரம்பிப்பாளோ என்கிற ஐயப்பாடு அந்த அம்மாளுக்கு உள்ளூற உண்டு. ரம்யாவுக்கும் வித்யாவுக்கும் திருமணமாகி அவர்கள் சம்பளம் போய்விட்டால் குடும்பம் எப்படி நடக்கும் என்கிற 'ரியலிசமான' கவலைதான் முக்கிய காரணம்.

இதோ ரம்யா கிளம்பி விட்டாள். வேறு எந்த விதமான அக்கறை இருக்கிறதோ இல்லையோ, பெயரைப் பொருத்தமாக வைப்ப

**அன்பிலார்!**



சமீபத்தில் திருச்சி சென்றிருந்தேன். அங்கு திராவிட முன்னேற்றக் கழகத்தின் பொதுக் கூட்டம் பற்றிய சுவரொட்டி ஒன்று கண்டேன். அதில் பேசுவோர் என்பதன் கீழ் "டாக்டர் கலைஞர்" என்றும் "மாண்புமிகு அன்பிலார்" என்றும் குறிப்பிடப்பட்டிருந்தது. முன்னாள் அமைச்சர் அன்பில் தர்மலிங்கத்தை அன்பில்லாதவர் ஆக்கிவிட்டார்களே!

- ரா. பாலா



மணிலாவில் முகம்மது அலி - ஜோஃப்ரேஸியர் குத்துச் சண்டை அக்டோபர் 1ந் தேதி நடந்தது. அதை அமெரிக்காவில் செப்டம்பர் 30 அன்றே மக்கள் டிவியில் பார்த்தனர். எப்படி? மணிலாவில் அக்டோபர் 1ந் தேதி என்பது அமெரிக்காவில் அதற்கு முதல் நாள்தான் (செப். 30). -டைம் - பானி

இல் மிகவும் அக்கறையுடன் அவளுடைய பெற்றோர்கள் நடந்துகொண்டதை மனதாரப் பாராட்டினேன்.

ரம்யா தெருக்கோடி சென்று திரும்பும் போது என்னைப் பார்ப்பது தெரிகிறது. இப்போது கண்களில் மருட்சி அதிகம் இல்லை. மறுவினாடி அவன் பார்வையினின்று மறைந்து போனாள்.

ரம்யாவின் அம்மா தன் வீட்டுக் கேட்டைச் சாத்திவிட்டு என் வீட்டை நோக்கி வருவதைக் கவனித்தேன். ஆனால் கவனிக்காதது மாதிரி முகத்தை வேறுபுறம் திருப்பிக் கொண்டேன். ஹாலில் அம்மா அந்த மாமியை வரவேற்பது தெரிந்தது. அவர்கள் என்ன பேசுவார்கள் என்று கேட்க வேண்டும் என்கிற ஒருவித அர்த்தமற்ற ஆசை தோன்றவும் காதைப் பட்டை தீட்டிக் கொண்டு காத்திருந்தேன்.

''என் மாமி! உங்க பிள்ளை இன்னிக்கு ஆபீஸ் போகலையா?'' ரம்யாவின் அம்மாவுடைய அக்கறையான கேள்வி.

''என்னமோ முக்கியமான வேலை இருக்காம். அதனாலே லீவு போட்டிருக்கானும். என்னடா வேலை என்று கேட்டால், உனக்குப் புரியாது என்கிறான்.'' — இது என்னுடைய அம்மா.

'''என்னமோ மாமி, இந்தக் காலத்துப் பசங்களே இப்படித்தான். காரண காரியமில்லாமல் ஏதோ செய்யறதுகள். என்ன விஷயம் என்று கேட்டால் உனக்குப் புரியாது. நீ அந்தக் காலத்து மனுஷி என்கிறது — இல்லாவிட்டால் சும்மாத்தான் எனகிறதுகள் இப்படித்தான் பாருங்களேன், எங்க ரம்யாவுக்கு மஞ்சள் தேய்த்துக் குளிக்கிறதுன்னு பிடிக்கவே பிடிக்காது. இன்னிக்குக் குளிச்சிட்டு வரச்சே மோகத்திலே மஞ்சளை அப்பிண்டு வந்து நிக்கறா. இன்னிக்கி என்னடி விசேஷம்னு, சும்மாத்தான் ஆசையாயிருந்தது என்கிறாள். இதுக்கு என்ன சொல்றேள்?'' என்றாள் அந்த மாமி.

என்னுடைய அம்மா சும்மா இருக்காமல், ''ஆமாம், மாமி! அவளுக்கும் வயசாகிவிட்ட தோன்றோ! அந்தந்தக் காலத்திலே அதனதன் மேல் ஆசை தானாக வரும்'' என்றாள்.

ரம்யாவுக்கு வயதாகியும் இன்னும் கல்யாணம் பண்ணி வைக்கவில்லை என்பதை என்னுடைய அம்மா மறைமுகமாகக் குத்திக் காட்டுவதைப் புரிந்துகொண்ட அந்த மாமி ஆக்ரோஷத்துடன், ''நீங்க நினைக்கிறது மாதிரி இல்லை மாமி. ரம்யாவுக்குக் கல்யாணம் பண்ணறதுக்கு நாங்க எப்ப [illegible]சாலும் அவதான் எனக்கு இப்ப வேண்டாம் என்று தடுத்துக் கொண்டேயிருக்காள். நாங்கள் எப்பவும் தயாரா இருக்கோம். நல்ல வரனும் குதிர்ந்து அவளும் சரி என்று சொல்ல வேண்டியதுதான் பாக்கி'' என்றாள். எவ்வளவு பெரிய பொய்யை அலட்சியமாக உண்மைபோல் அந்த அம்மாள் சொல்கிறாள் என்று வியந்து கொண்டேன்.

என் தாயை அத்துடன் விடாமல், ''ஏன் மாமி, உங்க பிள்ளைக்கும்தான் வயசாகிறதே! ஏன் இன்னும் கல்யாணம் பண்ணவில்லை?'' என்று அந்த அம்மாள் கேட்டு விட்டாள்.

என் அம்மா என்ன பதில் சொல்லப் போகிறாள் என்று ஆவலுடன் காத்திருந்தேன்.

''அதை ஏன் கேட்கிறேள்! உங்க ரம்யாவுக்குக் கொஞ்சமும் குறைஞ்சவன் இல்லை என் பிள்ளை. இன்னும் ரெண்டு வருஷம் போகட்டுமே என்கிறான். இவனை எப்படி ஒத்துக்க வைக்கிறதுன்னே புரியவில்லை'' என்றாள் என்னுடைய அம்மா. இந்தப் பொய் ரம்யாவின் அம்மா சொன்ன பொய்யில் கொஞ்சமும் குறைந்தது இல்லை.

'என் பிள்ளை கிராஜுவேட், சொந்தத்தில் வீடு இருக்கிறது' என்கிற காரணம் சொல்லிக் கையில் ரொக்கமாகப் பத்தாயிரம் வரதட்சணை, வைரத்தோடு, வைர மூக்குத்தி, வைர மோதிரம் ஆக எல்லாம் சேர்த்து நாற்பதாயிரம் செய்ய வேண்டும் என்று எத்தனையோ அழகான பெண்கள் வரும்போது அந்தச் சம்பந்தங்களை முறித்துவிட்டு இப்போது என் மீது பழி போடுகிறாள்.

தாயைப் பகைத்துக் கொள்ளக் கூடாது என்று நான் பொறுத்துக் கொண்டேன். இனி பொறுப்பதில் பிரயோசனமில்லை என்றுதான் நான் முடிவு கட்டிவிட்டேனே!

கல்யாணப் பேச்சு ஆரம்பித்ததனால் சம்பாஷணையின் சுவாரசியம் கெட்டுவிடவே அந்த அம்மாள் தன் வீட்டுக்குச் சென்று விட்டாள்.

மணி சரியாக ஒன்பதே முக்கால் ஆகியிருந்தது. அன்றைக்கு ஒன்பதிலிருந்து பத்தரை மணி வரையில் ராகுகாலம். நல்ல விஷயத்துக்காகச் செல்லும்போது ராகுகாலம் போன பின்பே கிளம்ப வேண்டும்.

முதலில் ரம்யாவின் மருண்ட முகமும், பிறகு வித்யாவின் விரக்தியும் சோகமும்

கலந்த முகத்தில் பிறந்த புன்னகையின் பாவனையும் நினைவில் பளிச்சிட்டு மறைந்தது.

அவசரம் அவசரமாகக் குளித்து விட்டு, சாப்பாட்டை முடித்துக் கொண்டு கிளம்பி னேன். ரிஜிஸ்டிரார் ஆபீஸை அடையும் போது மணி பதினொன்னே முக்கால். ரம்யா அங்கு தயாராக இருந்தாள். காலையில் நான் அவள் முகத்தில் கண்ட மருட்சி இப் போது துளிக்கூட இல்லை. அதற்கு மாறாக ஒருவித உற்சாகமும் வெட்கம் கலந்த வேட் கையும் அவள் முகத்தில் பரவி யிருந்தது.

என்னை வரவேற்றவள், 'மேரேஜ் ரிஜிஸ்ட் ரேஷன்' எப்படியும் ஒரு மணிக்குள் முடிந்து விடும்' என்று துடிப்புடன் கூறினாள்.

''டேய் ராஜா! ஏண்டா இவ்வளவு லேட்? நேரம் ஆக ஆக நீ எங்கே வராமல் இருந்து விடுவாயோ என்று உதறிக் கொண்டிருந் தோம். நல்ல வேளையாகச் சரியான 'டயத்' துக்கு வந்துட்டே!'' என்று முதுகில் ஒரு 'ஷொட்டு'க் கொடுத்தபடி என்னை வரவேற் றான் பாஸ்கர். பாஸ்கர் முகத்தில் அப்பட்ட மான 'கல்யாணக் களை' சொட்டிற்று.

''ஏண்டா பாஸ்கர், நான் அப்படி ஏமாத் திடுவேனா? கல்யாண மாப்பிள்ளை நீ, என் உயிர்ச் சிநேகிதன் என்றால், கல்யாணப் பெண் ரம்யா என் எதிர் வீடு. நான் 'விட்னெஸ்' போடாமல் உங்க 'ரிஜிஸ்டர் மேரேஜ்' நடந் துடுமா?'' என்று உரிமையுடன் நான் கேட் கும்போது ரம்யாவின் தங்கை வித்யா வந்து சேர்ந்தாள்.

அது என்னவோ, வித்யாவைக் கண்டதும் என்னையும் அறியாமல் என்னுள்ளே ஒருவிதக் குறுகுறுப்பும் உற்சாகமும் தோன்றின. சிவப் புக் குங்குமத்தை முகத்தில் வாரிக் கொட்டி யதைப் போன்றதொரு நிற மாற்றத்துடன் என்னைச் சமீபத்தில் கண்ட வித்யா வெட் கத்துடன் தலையைக் கவிழ்த்துக் கொண் டாள்.

இதைக் கவனித்த பாஸ்கர், ''ஏண்டா, ராஜா, உங்கள் இரண்டு பேருக்கும் என் றைக்காவது 'விட்னெஸ்' தேவைப்பட்டால் நானும் ரம்யாவும் தயார்'' என்றான். அந்த ஆமோதிப்பது போல் ரம்யா என்னைப் பார்த் தாள்.

''அவ்விதம் நேர்ந்தால் நான் மிகவும் அதிர்ஷ்டசாலிதான்'' என்றேன் முழு மனத் துடன்.

வார்த்தைகளை விழிகளில் தேக்கி ஓரப் பார்வையால் வித்யா என்னுடன் கொஞ்சி வது என் இதயத்துக்குப் புரிந்தது.

## நான் வணங்கும் மனித தெய்வம்-14

# இடது கரம் அறியாமல் வழங்கியவர்

நம் நாட்டிலும் ஏனைய நாடுகளிலும் புகழுடன் பேசப்படும் டி. வி. எஸ். ஸ்தாபனத்தை நிறுவிய டி. வி. சுந்தரம் ஐயங்கார் அவர்களின் மூன்றாவது புதல்வரே இரு துரைசாமி அவர்கள். நாங்கள் அவரை முதலாளியாகப் பாவிக்கவில்லை. முதலாளிக்கும் மேலாக, சொந்தத் தந்தையாகவே மதித்துப் போற்றினோம். அவரிடம் நாங்கள் நின்று கொண்டு பேசுவதையே விரும்ப மாட்டார்.

நாற்பது ஆண்டுகளுக்கு முன் நான் பணம் வசூலிக்கும் எழுத்தராக அவரிடம் வேலை பார்த்தபோது மதுரை நகரில் சைக்கிளில் வெகு வேகமாகச் செல்வேன். சில சமயங்களில் திடீரென்று பின்னால் அவர் குரல் கொடுப்பது கேட்கும். பயந்து கொண்டு சைக்கிளை நிறுத்தினால் அவர் உரக்கப் புத்திமதிகளைச் சொல்லுவார். "நீ நடுப்பாதையில் இவ்வளவு வேகமாகச் சைக்கிள் ஓட்ட வேண்டாம். உனக்குக் கை, கால்கள் போனால் எந்த டாக்டராலும் ஈடு செய்ய முடியாது. நாங்கள் உனக்குப் பணம் கொடுப்போம். வைத்தியம் செய்வோம். ஆனால் உன் கை கால்களைக் கொடுக்க முடியாது. ஜாக்கிரதை" என்பார்.

மெதுவாகப் பேசவதே அவருக்குத் தெரியாது. எப்பொழுதும் கலகலப்புடனே பேசுவார். மனத்தில் ஒன்று வெளியில் ஒன்று என்பது அவரிடம் கிடையாது.

தம்மிடம் பழகியவர்களுக்கு அவர் பண உதவி செய்வார். 'திருப்பிக் கொடுக்காவிட்டால் பாவம் ஏழை, போனால் போகட்டும்' என்று மறந்து விடுவார். மதுரையில் ஒரு மிருக வைத்தியருக்கு ரூபாய் நூறு கடன் கொடுத்தார். அவர் கடலூருக்கு மாற்றிப் போய் விட்டார். என் முதலாளி செலவில் நான் கடலூருக்குப் பணம் வசூலிக்கச் சென்றேன். அவர் கடலூரிலும் கடன் வாங்காத இடம் இல்லை என்று தெரிய வந்தது. மதுரைக்குத் திரும்பி வந்து கதையைச் சொன்னேன்.. 'பாவம் எவ்வளவு கஷ்டப்படுகிறாரோ' என்று அனுதாபப்பட்டார்!

ஒவ்வோர் ஆண்டும் புரட்டாசி மாதக் கடைசிச் சனிக்கிழமை அன்றிரவு பூசைகள் விசேஷமாக அவர் இல்லத்தில் நடக்கும். மதுரையில் உள்ள தல்லாகுளம் பெருமாள் ஆலயத்திலிருந்து சுவாமிக்கு நைவேத்தியம் செய்யப்பட்ட பிரசாதங்கள் கொண்டு வரப்படும். குறிப்பிட்ட சிலர் சுமார் முப்பது பேர் வரையில் கூடியிருப்போம். இரவு ஒன்பது மணிக்குமேல் எல்லோருக்கும் சமமாகப் பிரசாதங்கள் வழங்கப்படும். திரும்பி நாங்கள் புறப்படும்போது ஒவ்வொருவருக்கும் நாங்கள் வரும்போது செலவழித்த பஸ் கட்டணம், போகும்போது ஏற்பட்ட கட்டணம் முழுவதும், அவரே கொடுப்பார்.

பக்கத்து ஊரிலோ, ஜில்லாவிலோ ஒரு கிராமத்தில் ஒரு லிங்கம், ஆள்வார், அல்லது சிலை கண்டுபிடிக்கப்பட்டது என்ற விவரத்தை அறிந்தால் மறு ஞாயிற்றுக்கிழமை காலையில் நான்கு மணிக்கே வீட்டை விட்டுப் புறப்படுவோம். அது போக்குவரத்துக்கே வசதி இல்லாத கிராமமாய் இருக்கும். ஆனாலும் அவருடைய தெய்வபக்தி சிரமம் ஒன்றும் பார்க்காது. காரைப் பார்த்துக் கொள்ளும்படி யாரிடமாவது சொல்லி விட்டு அவர் நடந்தே செல்வார்.

அவருடைய ஊழியர்களில் யாராவது கொஞ்சம் அழுக்கு உடைகள் அணிந்து வந்தால் உடனே புது உடைகள் வாங்கப் பணம் கொடுப்பார். மிகக் குறைந்த சம்பளம் பெறும் ஊழியர்களாய் இருந்தால் இனாமாகக் கொடுப்பார். மற்றவர்களுக்கு ஆறு மாதங்கள் அல்லது ஒரு வருடத் தவணையில் சிறுகச் சிறுகத் திருப்பிக் கொடுக்கும்படி சொல்லுவார்.

ஒவ்வொரு நாளும் அதிகாலையில் ஒவ்வோர் ஆலயத்துக்குச் செல்லுவார். அவர் காரை ஒருநாள் மதுரை மீனாக்ஷி ஆலயத்துக்கு முன் பார்க்கலாம். ஒருநாள் அழகர் சன்னதிக்கு முன் பார்க்கலாம். ஒருநாள் தல்லாகுளம் பெருமாள் கோயிலுக்கு முன் பார்க்கலாம். திருப்பரங்குன்றத்திலும் சுப்பிரமணியர் ஆலயத்துக்கு முன் பார்க்கலாம். மதுரைக்குப் பன்னிரண்டு மைல் தூரத்திலுள்ள கள்ளழகர் ஆலயத்திலும் பார்க்கலாம். தெய்வபக்தியே ஏழைகளின் மீது அன்பாக மாறியது.

அவர் மறைந்ததைப் பற்றிக் கல்கியில் வெளியான தலையங்கத்தில், 'இடது கரத்துக்குத் தெரியாமல் வலது கரத்தால் தர்மம் செய்த புண்ணியவானை'க் கொண்டு போக யமனுக்கு எப்படி மனம் வந்ததோ என்று குறிப்பிட்டிருந்தது. —எம். அழகிரிசாமி



## 7

காலையிலேயே கண் விழித்தபோது அநூப் எங்கோ வெளியே போகத் தயாராகிக்கொண்டிருப்பதைக் கண்டு பிரபு வியந்தான். அப்பொழுது அவன் சூட்டுக்குப் பொருத்தமான 'டை'யைத் தேடிக்கொண்டிருந்தான். பிரபு பதறிப்போய், ''இதெல்லாம் என்னடா?'' என்று கேட்டான்.

''ஒன்றுமில்லையே !''

''அப்போ இந்தச் சிவச் சிங்காரமெல்லாம் எங்கே போவதற்காம்?''

''எங்கே போனால் உனக்கு என்ன?''

''நான் குடிக்கிறேன் என்கிற கோபத்தில் தானே இப்படி விட்டேற்றியாகப் பேசுகிறாய்? நாளையிலிருந்து குடித்தால் என் பெயரை மாற்றி அழை!''

''நாளைக்கென்று ஒத்திப் போடுவானேன்? நல்ல காரியத்தை இன்றைக்கேதான் தொடங்கேன்!''

''உன் இஷ்டப்படியே செய்கிறேன். இப்பொழுது சொல்லு, எங்கே புறப்பட்டாய்?''

''ஜீஸஸ் அண்ட் மேரி கல்லூரிக்கு!''

''அந்த மாயக்காரி வரச் சொல்லி இருக்கிறாளோ?''

''இல்லை, மிஸ்டர் கன்னா அனுப்பிய துணிமணிகளைக் கொண்டு போய்க் கொடுத்து விட்டு வரப் போகிறேன்!''

''அந்தப் பெண்ணே வருவாள் என்று சொல்லிக் கொண்டிருந்தாயே!''

''அவளை ஏன் அலைய வைக்கணும்? நாமே தான் போய் வருவோமே என்று...''

''புரிகிறது ,உன் நோக்கம்!''

''என்ன புரிகிறது?''

''மிஸ் கன்னாவைச் சாக்காகக் கொண்டு நீ ரூபாவைத் தேடப் போகிறாய்!''

''நீ நன்றாகத்தான் புரிந்து கொள்ளுகிறாய் ! போதை இறங்கினால் எல்லாம் எவ்வளவு தெளிவாக விளங்குகிறது, பாரு!''

''ஆனால் நீ அங்கே போவது சரியாக இருக்காது என்று நினைக்கிறேன்!''

''ஏன்?''

''உன் அத்தை உன்னைப் பெண் பார்க்க அனுப்பியிருக்கிறாள்: துணிமணிகளைக் கொண்டு தருவது ஒரு வியாஜம் என்று நீ சொன்னாயல்லவா ?''

''ஆமாம். ஆனால் நான் எந்த நோக்கத்தோடு வருகிறேன் என்று அந்தப் பெண்ணுக்குத் தெரியாதே!''

''ஆனால் எனக்கென்னவோ இது 'டபிள் கேமா'கப் படுகிறது. அவளுக்கும் இதே போலச் செய்தி வந்திருக்கும்!''

''பரவாயில்லை. அவள் சந்தேகப்பட்டால், ரூபா என் நண்பனின் தங்கை என்று சொல்லி விட்டுப் போகிறேன்!''

''எந்த நண்பன்?''

''எந்த நண்பன்? நீதான் சொல்லேன், என் பிரபுதான்!''

அதைக் கேட்டுப் பிரபு கடகடவென்று சிரித்தான். அநூப்பும் அவனுக்குத் துணை சேர்ந்து கொண்டான். திடீரென்று இருவருடைய சிரிப்பும் நின்றது. யாரோ அழைப்பு மணியை அடித்ததுதான் காரணம்.

''யார் வந்திருப்பார்கள், இத்தனை சீக்கிரம்?'' அநூப் மெதுவான குரலில் கேட்டான்.

''வீட்டுச் சொந்தக்காரனாக இருக்கும். வாடகைக்கு வந்திருப்பான்!''

''எத்தனை மாத வாடகை பாக்கி?''

''ஆறு மாதம்!''

''கதவைத் திறக்கலாமா?''

''சற்றுப் பொறு. நான் அடுத்த அறைக்குப் போய்விடுகிறேன். கேட்டால் தூங்கிக்கொண்டிருப்பதாகச் சொல்லிவிடு!''

''அவன் நீ படுத்திருக்கிற அறைக்கே வந்தால்....?''




''வரமாட்டான். அவன் அத்தனை முட்டாள் இல்லை. அவனுக்குத் தெரியும், நான் 'போட்டு'விட்டுத் தூங்குகிறவன். தூக்கத்தைக் கலைத்தால் செம்மையாக வாங்கிக் கட்டிக் கொள்ள நேரிடும் என்பது!'' என்று கூறிக் கொண்டே பிரபு உள்ளே போனான். போகும் பொழுது விரிப்பில் உருண்டு கிடந்த பாட்டிலை எடுத்துச் செல்ல மறக்கவில்லை.

அழைப்பு மணி மீண்டும் ஒலித்தது. அநூப் சட்டென்று கதவைத் திறந்தான். திறந்தவன் அப்படியே திக்பிரமை பிடித்தவன் போல நின்று விட்டான். வெளியே நின்று கொண்டிருந்தது வீட்டுச் சொந்தக்காரன் இல்லை; அஞ்சு!

கதவைத் திறந்ததும் கன கடுமையான குளிர் காற்று வீசியது. அநூப்பின் உடல் பனிக் கட்டியெனச் சில்லிட்டது. அவனது உதடுகள் உலர்ந்து போயின. உடல் வெடவெடவென நடுங்கலாயிற்று.

''பிரின்ஸ்!'' அஞ்சு வியப்பில் விரிந்த விழிகளால் அவனையே பார்த்தாள்.

அநூப்பும் அவளையே வைத்த கண் வாங்காமல் பார்த்துக் கொண்டிருந்தான்.



தமிழாக்கம்:
ரா. வீழிநா

''நம்பர் நான்கு, சாந்தி வில்லா இது தானே?'' அஞ்சு கண நேரம் தயங்கியபின் கேட்டாள்.

''ஆமாம், நீங்கள்....?''

''அஞ்சு!''

''அதாவது அஞ்சு கன்னு!, இல்லையா?'' அநூப் தடுமாறாத குறை. எப்படியோ கேட்டு விட்டான்.

''ஆமாம்.''

''வெளியிலேயே நிற்கிறீர்களே, வாருங்கள், உள்ளே!'' தன் பதற்றத்தைப் புன்னகையாக மாற்றி அவளை உள்ளே வரு மாறு அழைத்தான் அநூப்.

உள்ளே வந்த அஞ்சு பார்வையைச் சுழற்றி அறையை ஒரு நோட்டம் விட்டாள்.

அநூப் அடுத்த அறையின் கதவைச் சாத்தி விட்டு அவள் அருகே வந்தான். ''ஆமாம், இத்தனை கருக்கலில் எப்படி வந்தீர்கள்?'' என்று கேட்டான்.

''உங்களுக்கு நான் வருவேன் என்ப தெரியுமா?''

''தெரியும். உங்கள் கம்பனித் தூ செலது.....''

''அப்போ அநூப் உங்களிடம் சொல்லி யிருக்கிறார் என்று சொல்லுங்கள்!''

''ஆமாம்!''

''அவர் என்ன, இன்னும் தூங்குகிறாரா?''

''ஆமாம். இல்லை, இல்லை! நீங்கள் உட் காருங்கள். இதோ வந்து விடுவார்!''

''அது சரி, உங்கள் உடல் ஏன் இப்படி நடுங்குகிறது?''

''இன்றைக்குக் கொஞ்சம் குளிர் அதிகம்!''

''அதனால் இல்லே. எனக்குத் தெரியும்!''

''என்ன தெரியும்?''

''என்னைத் திடீரென்று பார்த்துவிட்டுப் பதறிப் போயிருக்கிறீர்கள்!''

''நான் எதற்காகப் பதறிப் போகணும்?'' அநூப் விறைப்பாகக் கேட்டான்.

''நேற்று இரவு நீங்கள்தானே ரூபாவோடு இருந்தது?''

''ஆமாம்.''

''உங்கள் பெயர் மட்டும்தான் பிரின்ஸா? அல்லது நீங்கள் மெய்யாகவே ஏதாவது அரச குடும்பத்தைச் சேர்ந்தவர்தானா?''

''நேற்றுவரை நிஜமாகவே பிரின்ஸ். இன்று பெயர் மட்டும்தான் எஞ்சி நிற்கிறது!''

''உங்களுடைய நேற்றைய நிலை எதுவும் எனக்குத் தெரியாது. ஆனால் இன்றைய நிலை நேற்றைய நிலையைக் காட்டிலும் பல படி மேல் என்பது தெரியும்!''

''அதெப்படி ?''

''உங்கள் காதல் கனிமொழி நிறைந்த கடிதங்களைப் படித்துப் பார்த்து !''

''அப்போ நீங்கள் ரூபாவின் கடிதங்களையும் படித்திருப்பீர்கள் !''

''உங்கள் கடிதங்களை எப்பொழுது படித்துப் பார்த்திருக்கிறேனோ, அப்பொழுது அவள் கடிதங்களையும் படித்திருப்பேன் என்பது சொல்லாமலே விளங்குமே! அவள் என்னுடைய 'ரூம் மேட்'. என்னிடம் எதையுமே ஒளிப்பதில்லை!''

''என்னைப் பற்றி ஏதாவது சொன்னாளா?''

''சொல்லவேறு வேணுமாக்கும்! அவள் தான் பைத்தியம் பிடித்து அலைகிறாளே ! அவளுடைய உள்ளத் துடிப்பில் ஒரே சீராக 'பிரின்ஸ், பிரின்ஸ், பிரின்ஸ்' என்ற ஒலியே கேட்கிறதாக்கும் !''

''அப்படியிருக்கும் பொழுது அவள் ஏன் என்னிடம் பொய் சொன்னாள் ?''

''அப்படி என்ன பொய் சொன்னாள் !''

''அவளுக்கு என்னிடம் 'காதல் — கீதல் எதுவும் இல்லையாம் !''

''இது பெண்களோடு கூடவே பிறந்த குணம். தங்களைக் காதலிப்பவர்களை இப்படித் துடிக்க வைப்பதில் அவர்களுக்கு ஓர் ஆனந்தம் !''

''சொல்றதைப் பார்த்தால் நீங்கள் இந்த 'ஃபீல்டி'ல் நிறைந்த அநுபவசாலி என்று தோன்றுகிறது.''

''இல்லே, இல்லே!'' அஞ்சு சற்று வெட்கித் தான் போனாள்.

'' அடே, நீங்கள் ரொம்பவும் வெட்கப்படுகிறீர்களே! இன்னும் என்ன, என்ன நடக்கும் இந்தக் காதலில்?'' என்று குறுநகை புரிந்தவாறே கேட்டான் அநூப்.

'' எனக்கு என்ன தெரியும் ? ஏதோ பெண்கள் பேசக் கேட்டதைச் சொன்னேன்!''

''சொன்ன வரையில் சரி ! பெண்களைப் பற்றிப், பெண்ணின் வாயாலேயே இத்தனை விஷயங்கள் தெரிந்து கொள்ள முடிந்ததே, அதுவே பெரிதில்லையா ?'' என்ற அநூப் மேஜையின் மேலிருந்த பொட்டணத்தை எடுத்து அஞ்சுவிடம் நீட்டினான்.

'' என்ன, இது ?'' அஞ்சு துணுக்குற்றாள்.

''உங்கள் பொருள்கள் !''

''மிஸ்டர் அநூப் எங்கே ?''

'' உங்கள் எதிரே வரக் கூசுகிறார் !''

'' ஏன் ?''

''நேற்றிரவு கொஞ்சம் அதிகமாகச் சாப்பிட்டுவிட்டார். இன்னும் மயக்கம் முழுசாக இறங்கவில்லே!''

''அவர் குடிப்பதுண்டா ?''.

'' எப்பொழுதாவது இப்படி விளையாடுவார் ! எடுத்த பாட்டிலைத் தீர்க்காமல் விடமாட்டார் !''

இதைக் கேட்டு அஞ்சு மௌனமானாள். அவளது முகத்தின் நிறம் வெளிறிப் போய் விட்டது.

அநூப்பும் விந்தைமிகு வலையில் தனக்குத் தானே மாட்டிக் கொண்டான்.

''ஆமாம், உங்களுக்கும் மிஸ்டர் அநூப்புக்கும் என்ன உறவு ?'' திடீரென்று அஞ்சு கேட்டாள்.

'' உறவா ?'' அநூப் கண நேரத்துக்குத் திகைத்துத்தான் போனான். அப்புறம் சமாளித்துக் கொண்டு, ''நான் அவனுடைய நண்பன்!'' என்றான்.

'' அப்படியானால் நீங்கள் மிஸ்டர் பிரபுவா ?''

''ஆமாமாம் ! அநூப் என்னுடைய பர்ஸனல் செக்ரெடரி.''

''சரி, அப்போ நான் வருகிறேன்!'' என்று அஞ்சு புறப்பட எழுந்தாள்.

''அப்படி என்ன அவசரம் ? நீங்கள் மிஸ்டர் அநூப்பைப் பார்க்க வேண்டாமா?''

''அவசியம் என்ன? வந்த காரியம் முடிந்து விட்டது. அவரைப் பார்த்து நான் என்ன செய்யப் போகிறேன்?''

'' அது மெய்தான் ! ஆனால் அந்த அதிர்ஷ்டம் கெட்ட பயல் உங்களைப் பார்க்கத் துடியாய்த் துடித்துக் கொண்டிருந்தான் !''

'' ஏனாம் ?''

''ஓர் அழகான பூவைப் பார்க்க — பூவையைப் பார்க்க !'' அநூப் தயங்கினான்.

அஞ்சுவின் முகத்திலே மீண்டும் புன்னகை பூவாக மலர்ந்தது. ''நீங்கள் ரொம்ப அழகாகப் பேசுகிறீர்கள்!'' என்றாள்.

'' என் பேச்சுத்தான் அழகாயிருக்கிறதா ? நான் இல்லையா?'' அநூப் பொருள் பொதிந்த பார்வையை அஞ்சுவின் மேல் பதித்தான்.

'' நீங்கள் அழகாக இல்லையென்றால் கல்லூரி மாணவிகள் அனைவரும் ரூபாவின் அதிர்ஷ்டத்தை எண்ணிச் செத்துச் சுண்ணாம்பு ஆவார்களா ?''

'' அந்த மாணவிகளுள் நீங்கள் சேர்த்தி இல்லையா ?''

இந்தக் கேள்வியைக் கேட்டு அஞ்சு அதிர்ந்து போனாள். ஒரு கணம் மௌனமாக அநூப்பையே பார்த்துக் கொண்டிருந்தாள். ''என்ன வேடிக்கை பாருங்கள் ! உங்கள் பேச்சும் ரூபாவின் பேச்சும் ஒன்றுபோலவே இருக்கின்றன. நீங்கள் கேட்ட இதே கேள்வியைத்தான் அவளும் கேட்டாள் !'' என்றாள்.

---



'அண்ட் சன்ஸ்' என்று இருப்பதுபோல் இங்கிலாந்தில் 'ஃபிராங்க் பார்க்கர் அண்ட் டாட்டர்ஸ்' என்ற பெயரில் ஒரு லாரி கம்பெனி இருக்கிறது.

உமன்ஸ் ஓன் — கே. ஆர்


சென்னை
தேவிபாரடைஸ் 70 MM. A/C
அகஸ்தியா 70 MM
சரவணா
மற்றும்
தென்னாடெங்கும்
மக்கள் திலகம்
எம். ஜி. ஆர்
பல்லாண்டு வாழ்க!
உதயம் புரொடக்‌ஷன்ஸாரின்
அன்புக் காணிக்கை
ஆர்.கே.சண்முகம்
இசை: கே.வி.மகாதேவன்
ஒளிப்பதிவு: டி.வி.ராஜாராம்
தயாரிப்பு: மணியன், வித்வான் லட்சுமணன்
டைரக்‌ஷன்: கே.சங்கர்



''அதற்கு நீங்கள் என்ன பதில் சொன்னீர்கள் ?''

'' நிஜத்தைச் சொல்லட்டுமா ?''

''சொல்லுங்கள். நான் ரொம்ப ஃப்ராங்கான மனுஷ்யன் !''

''எனக்குமே அவளிடம் பொறாமைதான்!''

இதே சமயம் வாசலிலிருந்து அழைப்பு மணி ஒலிக்கவே, இருவருக்கும் உடம்பைக் குலுக்கிப் போட்டது. இருவரும் ஒருவரையொருவர் செய்வதறியாது பார்த்துக் கொண்டனர். மணி மறு முறையும் ஒலித்தது. அப்புறமோ ? — ஒலித்த மணி ஓயவில்லை. அநூப் எரிச்சலுடன் கதவைத் திறந்துவிட்டான்.

கதவு திறந்ததும் பருமனான ஒரு மனிதன் உள்ளே நுழைந்தான். சுற்றுமுற்றும் பார்த்துவிட்டு, ''எங்கே பிரபு?'' என்று கனமான குரலில் கேட்டான்.

இதைக் கேட்டதும் அநூப் விதிர் விதிர்த்துப் போனான். இனி தன் இரகசியம் அம்பலமாகிவிடும் என்பதை அறிந்தான். அஞ்சலியை ஒரு முறை பார்த்தான். பிரபு என்ற பெயரைக் கேட்டதுமே அவளும் விழித்துக் கொண்டிருந்தாள், தன் காதுகளையே நம்பாதவள் போல !

''ஆமாம், நீங்கள் யார் ?'' அநூப் அடக்கமாகக் கேட்டான்.

'' நான் இந்த வீட்டுக்குச் சொந்தக்காரன். பிரபு தடியன் எங்கே இருக்கிறான்?''

இனி எத்தனை நேரம்தான் அநூப் பிரபுவாக இருக்க முடியும் ? அவன் பிரபுவின்

# "மழலை அமுதம்"

**ரீனா ஜெல் யோனயா**

சோவியத் சினிமா நடிகை

**இக்கட்டுரையாளர் திரைப்பட உலகில் மட்டுமின்றி, பத்திரிகை உலகிலும் புகழ்பெற்றவர். குழந்தைகளின் மனப் போக்கைச் சித்திரிக்கும் சில நிகழ்ச்சிகளை அவர் இங்கு தருகிறார். —ஆசிரியர்.**



**டெலிவிஷன் நன்மை**

வால்கா என்பவன் என் அண்டை வீட்டுப் பையன். அவனிடம் கேட்டேன் :

''டெலிவிஷனில் எல்லா நிகழ்ச்சிகளையும் எப்படிப் பார்க்கிறாய்? அது மிகக் கடினம் ஆயிற்றே !''

''அதில் சிரமம் ஒன்றுமில்லை'' என்றான் வால்கா. ''டெலிவிஷன் பார்ப்பது எனக்கு நல்லது என்று பாட்டி கூறுகிறாள். ஏனெனில், அந்தச் சமயத்திலாவது நான் தலைகீழாக நிற்க மாட்டேன்; சாமான்களை உடைக்க மாட்டேன் அல்லவா ?''



**குழந்தையின் கடிதம்**

நாடாஷா என்ற சிறுமி, ரேடியோ நிலையத்துக்கு ஒரு கடிதம் எழுதியிருந்தாள். பெரிய காகிதத்தில், பெரிய எழுத்துக்களில், ''நான் சந்திரனுக்குப் பறக்கத் தயாராயிருக்கிறேன்'' என்று அவள் எழுதியிருந்தாள். ஆனால், அக் கடிதத்தின் இறுதியில் ஒரு குறிப்பு இருந்தது. ''வாரக் கடைசியில்தான் நான் பறக்க முடியும். அப்பொழுதுதான் என் அப்பாவும் என்னோடு வர முடியும்.''



**ஸ்பேர் பார்ட் !**

ஒரு மனிதனின் உருவத்தை ஒரு சிறுவன் வரைந்திருந்தான். அது தவிர தனித் தனியாகப் பல கால்களையும் கைகளையும் அவன் வரைந்திருந்தான்.

''ஏன் இப்படி ?'' என்று கேட்டபொழுது அவன் சொன்னான்:

''அந்தக் கைகளும் கால்களும் பழுதுபட்டால் மாற்றிக் கொள்ள ஏற்ற உதிரி பாகங்கள் !''



**எதிர்காலச் சிந்தனை**

தனது எதிர்காலத்தைப் பற்றி உரக்கச் சிந்தித்து ஒரு குழந்தை இவ்வாறு கூறியது :

''நான் பெரிதாக வளர்ந்ததும், பெண்ணாக இருந்தால் நிச்சயம் டாக்டர் ஆவேன் ; ஆணாக இருந்தால் அநேகமாக விண்வெளி வீரன் ஆவேன்.''

அறையை நோக்கிக் கையைக் காட்டிவிட்டான். வீட்டுக்குச் சொந்தக்காரன் படபட வென்று கதவைத் தட்டினன். அது பொறுக்காமல் பிரபு கதவைத் திறந்தான். அவன் வாயால் இக்குழம்பைக் கக்குவதற்கு முன் பாகப் பிரபு அவன் வாயைப் பொத்தி விட்டான். அஞ்சுவைப் பார்த்து, ''ஐ ஆம் ஸாரி !'' என்று கூறி வீட்டுக்காரனை உள்ளே இழுத்துக் கொண்டு, கதவையும் உட்பக்கமாகத் தாளிட்டுக் கொண்டான்.

அஞ்சு திரும்பி அநூப்பைப் பார்த்தாள். அவன் பேசாமல் நின்று கொண்டிருந்தான். அவனுக்குத் தன் கால்கள் தரையில் அழுந்திப் போவது போலத் தோன்றியது. அஞ்சு அவனிடம் மெதுவாக நெருங்கி வந்தாள். அவன் கண்களோடு கண்களைப் பொருத்தி, ''அவர் பிரபு என்றால் நீங்கள் யார் ?'' என்று கேட்டாள்.

அநூப் அப்பொழுது எவ்வளவு தாழ்ந்து போனன் ? ''உங்கள் அடிமை, சண்முகரி லிருந்து உங்களுக்குத் துணிகள் கொண்டு வந்தவன் !'' என்ற பொழுது அவன் தலை குனிந்தது.

''அதாவது அநூப். மிஸ்டர் அநூப் !''

அஞ்சுவின் குரலுமே நடுங்கியது.

''ஆமாம் !''

அஞ்சுவின் முகத்திலே கோபம் தெறித்தது. அவள் வேகமாகத் திரும்பி வெளியே போக முயன்றாள். அநூப் ஓடிப் போய் அவளை நிறுத்தப் பார்த்தான். அதற்குள் அவள்



### எழுத்தாளருக்குக் கடிதம்

ஒரு பள்ளிச் சிறுமி ஓர் எழுத்தாளருக்கு இவ்வாறு ஒரு கடிதம் எழுதினாள் :

''உங்களைப் போல் நானும் ஓர் எழுத்தாளராக விரும்புகிறேன். என்ன முயன்றாலும் என்னால் எழுத முடியவில்லை. என்னிடம் கருத்துக்கள் இல்லை போலும். நீங்கள் எழுதியபிறகு, உங்களிடம் கருத்துக்கள் ஏதாவது மிச்சம் இருக்குமானால், தயவுசெய்து அவற்றை எனக்கு அனுப்பி உதவுங்கள்.''

இக்கடிதத்தைத் தம் மனைவியிடம் எழுத்தாளர் படித்துக் காட்டினார். அப்பொழுது அவரது மகளும் இருந்தாள். அந்தச் சிறுமி கூறினாள் : ''ஐயோ, பாவம் ! ஒரு கருத்தாவது அனுப்புங்கள், அப்பா !''



### யந்திர மனிதன் வேண்டும்

முதல் வகுப்புப் படிக்கும் ஒரு சிறுவனின் கருத்து இது :

''இளம் குழந்தைகளுக்கு யந்திர மனிதன் மிக அவசியம்; ஏனெனில், இந்தக் குழந்தைகள் எப்பொழுதும் எதையாவது கேட்டுக் கொண்டே இருக்கின்றன. அவர்களுக்குப் பதில் அளிக்க யந்திர மனிதனைத் தவிர வேறு யாரால் முடியும் ?''

### ஏன் அழுதாள் ?

என் மகளைச் சர்க்கஸ் பார்க்கக் கூட்டிச் சென்றேன். வித்தைக்காரர்கள் மற்றும் கோமாளிகளின் செயல்களைக் கண்டு அவள் மகிழ்வுடன் துள்ளிக் குதித்தாள்; அடிக்கடி கை தட்டினாள். அப்புறம் சர்க்கஸில் ஒரு பலசாலி கீழே இருக்க, அவன் மீது பிரமிட் கோபுரம் போல் மற்றவர்கள் நின்றனர். அவர்கள் மெதுவாக சர்க்கஸ் வளையத்தைச் சுற்றி வந்தனர். அந்தக் கோபுரத்தின் மேலே ஒன்றைக் காலில் நின்றவண்ணம் ஒரு பெண் நடனம் ஆடிக் கொண்டிருந்தாள். அவளைப் பார்த்ததும் என் மகள் வீரிட்டு அலறினாள்.

''கண்ணே ! அழாதே ! அவள் கீழே விழுந்துவிட மாட்டாள். அவர்கள் அவளை நன்றாகப் பிடித்துக் கொண்டிருக்கிறார்கள்'' என்றேன். என் மகள் மேலும் பலமாக அழுதுகொண்டே சொன்னாள் :

''அதற்காக நான் அழவில்லை. இவர்களை யெல்லாம் சுமந்து கொண்டு கீழே இருக்கும் மனிதனுக்காக அழுகிறேன் !''



### அவன் கனவு

நண்பரின் வீட்டுக்கு விருந்துண்ணச் சென்ற அன்பர்கள், அவரது நான்கு வயது மகனிடம் கேட்டார்கள் :

'' உன் எதிர்காலக் கனவு என்ன?''

சிறிது நேரம் யோசித்த பின்னர் பையன் கூறினான் :

''இரண்டு நாய்களாக மாற வேண்டும் என்பது என் ஆசை. அப்படியானால் உற்சாகமாக விளையாடலாம்.''



விரைவாகக் கதவைத் திறந்து கொண்டு வெளியேறிவிட்டாள்.

குளிர்ந்த காற்று முகத்தில் அறைகிற்ற் போல் வீசவே, அநூப் நிலைகுலைந்து நடுநடுங் கிப் போனான்!

ரூபா மாலையில் நேரம் கழித்தே தன் அறைக்குத் திரும்பினாள்.

ஸிஸ்டர் தெரேஸா உடல் நலமின்றி இருந் ததால், ரூபா அவளுக்குப் பணிவிடை புரி வதில் ஈடுபட்டிருந்தாள். பலமுறை முயன் றும் அன்று அவளால் அஞ்சுவைச் சந்திக்க முடியவில்லை. அஞ்சுவுக்கு அவள் தாய் தந் தையர் தேர்ந்தெடுத்த வரன் பிடித்ததா, பிடிக்கவில்லையா என்பதை அறிய அவள் துடி யாய்த் துடித்தாள்.

தன் அறைக்குள் நுழைந்தவள் துணுக் குற்று நின்றாள். ஹாஸ்டல் பணியாள் அஞ்சு வினுடைய பெட்டி – படுக்கைகளை யெல்லாம் எடுத்து வெளியே வைத்துக் கொண்டிருந் தான். ஏதாவது பொருள் கிருள் விட்டுக்கிட் டுப் போய்விட்டதோ என்பதைத் தெரிந்து கொள்வதற்காக அஞ்சு கடைசி முறையாக ஒருமுறை அந்த அறையைப் பார்த்துக்கொண் டாள். ஒன்றும் விட்டுப் போகவில்லை என்பது உறுதியானதும் புறப்படத் தயாரானாள்.

''இதென்ன அஞ்சு, திடுதிப்பென்று? எங்கே புறப்பட்டு விட்டாய்?''கேள்வியில் வியப்பைத் தேக்கிக் கேட்டாள் ரூபா.

''சண்மகர்!''

''இதென்ன திடீர்ப் புரோகிராம்?''

''ஏதோ தோன்றியது, புறப்பட்டு விட் டேன்!'' என்றாள் அஞ்சு எங்கேயோ பார்த் துக்கொண்டு.

''என்னோடு இங்கேயே சில நாட்கள் தங்கு வதாகச் சொன்னாயே?''

''அப்பொழுது ஏதோ சொன்னேன். இப்பொழுது மாற்றிக் கொண்டு விட்டேன்!''

''அதுதான் கேட்கிறேன், திடீரென்று என்ன அவசரம்?''

''உனக்குத்தான் தெரியுமே, எந்த முடிவும் நான் திடுதிப்பென்று எடுப்பவள் என்று!''

''அப்படியானாலும் வாழ்க்கைத் துணை பற்றி யும் ஒரு முடிவுக்கு வந்திருப்பாயே! பையன் பிடித்தானா, சொல்லு!''

ரூபாவின் இந்தக் கேள்விக்கு அஞ்சு ஒன்றும் பதில் சொல்லவில்லை. அவளுடைய புரு வங்கள் மட்டும் நெரிந்தன.

''சொல்லடி, அந்தப் பையன் எப்படியடி இருக்கிறான், அழகாக இருக்கிறானா? அவன் 'பர்ஸனாலிடி' எப்படி இருக்கிறது? உனக்குப் பிடித்தம்தானா?'' கேள்விக்கு மேல் கேள்வி யாக அடுக்கிக் கொண்டே போனாள் ரூபா.

அஞ்சு திரும்பி அவளைப் பார்த்தாள். அவள் விழிகளில் கோபக் கனல் தெறித்துக் கொண்டிருந்தது. அவள் ரூபாவின்மீது வெறுப்பை உமிழ்ந்த வண்ணம் வெளியே போகலானாள்.

''உன்னை இப்படி யெல்லாம் விட்டேற்றி யாகப் போக விட மாட்டேன்!'' அஞ்சுவின் அந்தப் போக்குக்கு என்ன காரணம் என் பதை அறிந்து கொள்ளுவதற்காக ரூபா அவ ளது வழியை மறித்தாள். குழந்தையைப் போல் அவள் கையை இறுகப் பிடித்துக் கொண்டு, ''சொல்லித்தான் ஆகணும், அஞ்சு! உன் ரோமியோ எப்படி இருக்கிறான், சொல்லு!'' என்றாள் பிடிவாதமாக.

ரோமியோ என்ற சொல்லைக் கேட்ட மாத் திரத்தில் அஞ்சுவுக்குத் தன் உடலில் தீப் பிடித்தாற் போலிருந்தது; உள்ளத்தில் வேல் பாய்ச்சுகிற்ற் போலிருந்தது. அவள் உள்ளம் கொதித்து மனம் பேதலித்துப் போனாள். அவள் ரூபாவின் கன்னத்தில் ஓங்கி அறைந்து, ''ஷட் அப் யூ விச்!'' என்று கோபம் கொப் புளிக்கக் கூறினாள். அப்புறம் அங்கே நிற்கா மல் விடுவிடுவென்று வெளியே போய்விட் டாள். ஆனால் ரூபா...? பிரமை பிடித்தவள் போல் அப்படியே நின்றாள்! 'அஞ்சு ஏன் இப்படி அரக்கி போல் நடந்துகொண்டாள்?' என்ன யோசித்தும் அவளுக்கு விளங்க வில்லை. சீற்றத்தில் அஞ்சு சொன்ன கடு சொற்கள் அவள் செவியில் இன்னும் ஒலித் துக் கொண்டிருந்தன. அதோடு அவள் கன் னத்தில் கொடுத்த அறையோ...? காது பிய்ந்து விட்டாற்போல் 'விண் விண்' என்று தெறித்தது. அந்த வலியில் அவள் துடித்துப் போனாள். சின்னஞ் சிறு கேலி இப்படி ஒரு பயங்கர உருவம் எடுக்கும் என்று அவள் நினைத்துக்கூடப் பார்க்கவில்லை. (தொடரும்)

# சேமிப்பதற்கு யூகோ பாங்க் அருகாமையில் உள்ள வசதியான பாங்க்

நீங்கள் எங்கு இருந்தாலும் அங்கே உங்களருகில் ஒருவசதியான யூகோபாங்க் உள்ளது. சேமிப்பை எளிதாக்குவதற்காகவே. உங்களை வரவேற்கவும், உங்கள் சேமிப்பை வளரச் செய்யவும் நாடு முழுவதும் எங்கள் கிளைகள் பரந்து இருக்கின்றன.

விவரங்களுக்கு உங்கள் அருகில்
உள்ள யூகோ பாங்க் கிளையை
அணுகவும்




**யுனைடெட் கமர்ஷியல் பாங்க்**

UCOC-50A TAM

# 15. ரஹீமின் காதலி

"மிஸ்டர், கோபால்! உடனே வருகிறீர்களா?" – இன்டர்காமில் சேகரின் குரல் கேட்டது.

"எஸ் ஸார்!" என்று பதில் அளித்த கோபால், தம் முன் நின்ற இரண்டு மீனவர்களையும் "நீங்கள் போகலாம்" என்று அனுப்பி விட்டு உடனேயே சேகரின் அறையை நோக்கி விரைந்தார்.

"உட்காருங்கள்!" என்றான் சேகர். கோபால் உட்கார்ந்து கொண்டார். மேஜை மீது பழுப்பு நிற உறை கிழிபட்டுக் கிடப்பதையும் அதனடியில் ஒரு கடிதம் மடித்து வைக்கப் பட்டிருப்பதையும் அரை நொடிக்குள் அவருடைய கண்கள் கவனித்துக் கொண்டன.

"மிஸ்டர், கோபால்! ஓர் எதிர்பாராத கடிதம் வந்திருக்கிறது."

"அதைப் பற்றி மூன்று விஷயங்கள் கூற உங்கள் அனுமதி வேண்டும், ஸார்!"

சேகர் சிரித்துக் கொண்டே, "பேஷாகச் சொல்லுங்கள்!" என்றான்.

"முதலாவதாக அது நம் இலாக்கா கடிதம் இல்லை. டிபார்ட்மெண்ட் லெட்டராக இருந்தால் பழுப்பு நிற உறையில் வராது. ஆகவே, இது பொதுஜனத்திடமிருந்து வந்திருக்கிறது. இரண்டாவது, இது பீஜப்பூரில் போஸ்ட் செய்யப்பட்டிருக்கிறது. மேலேயுள்ள முத்திரையை வந்த உடனேயே பார்த்து விட்டேன்! மூன்றாவது உறைக்குக் கீழே உள்ள கடிதம். அது ஒரு பூல்ஸ்கேப் பேப்பரின் அரை ஷீட்! முழு ஷீட்டை இரண்டாகக் கிழிக்கும் போது கோணலாகப் போயிருப்பதால் ஓரங்களில் வளைவுகள் இருக்கின்றன. ஆகவே, அது பேப்பர் கிழித்துப் பழக்கப்படாத கை. அல்லது நேடியாக எழுத பேப்பர் 'கட்' செய்து வைத்துக் கொள்ளாத கை. அநேகமாக எழுதுவதற்கு அப்போதுதான் கடையில் ஒரே ஒரு ஷீட் வாங்கி வந்து கிழித்த கையாக அது இருக்க வேண்டும்."

"ரொம்ப சரி, மிஸ்டர் கோபால்! இது ஒரு கிராமவாசியின் கடிதம்தான்."

"ரொம்ப முக்கியமானதாக இல்லாவிட்டால் என்னை அழைக்க மாட்டீர்கள். மேலும் உங்கள் முகம் பிரகாசமாகவும் இருக்கிறது.... ஸார், விமலாவைப் பற்றி ஏதாவது துப்பு..."

"கோபால்! உங்களுக்குப் புத்திகூர்மை அதிகம்! உங்கள் ஊகம் சரிதான்.... இது விமலா பற்றிச் சில தகவல்களைக் கூறும் கடிதம்தான். பீஜப்பூரில் போஸ்ட் செய்யப்பட்டிருக்கிறது. எழுதியிருப்பவன் ஒரு கிழவன். அவன் மிகவும் நோய்வாய்ப்பட்





டிருக்கிறானும்...... தீராத வயிற்றுவலியாம். ஒரு மலை உச்சியில் ஏறிக் கீழே விழுந்தோ, ஒரு புலிக் குகைக்குள் நுழைந்தோ உயிரை விட்டு விடுவதாக இருக்கிறானும்.... 'அநேகமாக இந்தக் கடிதம் உங்கள் கையில் கிடைக்கும் போது நான் உயிர் துறந்திருப் பேன். அதற்குள் என் நெஞ்சை உறுத்தும் ஒரு விஷயத்தை உங்களுக்குத் தெரிவித்துவிட விரும்புகிறேன்' என்று எழுதியிருக்கிறான்—''

''ஸார்! விமலா அவனிடம் சில நாட்கள் இருந்தாளா?''

''கரெக்ட்'' என்று சொன்ன சேகர், ''கடிதத்தைப் படிக்கிறேன், கேளுங்கள்!'' என்று கூறிய வாறே கடிதத்தை எடுத்து வாய்விட்டுப் படித்தான்.

''அவர்கள் அந்தப் பெண்ணை ஒரு நாள் நடு இரவில் கொண்டு வந்தார்கள். தூரத்தில் நின்ற ஒரு லாரியிலிருந்து இறக்கிக் கொண்டு வந்தார்கள். அப்போது அவள் முழு பிரக்ஞையுடன் இருந்ததாகத் தெரியவில்லை.

அவள் அழகாக இருந்தாள். இருபது வயது தான் இருக்கும். மூக்கு நல்ல தீர்க்கம். வெள்ளைத் துணியினால் சுற்றியிருந்தார்கள். அரை மயக்கத்தில் நோய்வாய்ப்பட்டவள் போல் 'ஆ. ஊ!' என்று அரற்றிக் கொண்டிருந்தாள்.

வைக்கோல் பரப்பிய மெத்தையில், ஜமுக்காளத்தை விரித்துப் படுக்க வைத்தோம். ஹரிகேன் வெளிச்சத்தில் என் மனைவி அவள் முகத்தைப்பார்த்து விட்டு, 'யார் வீட்டுப் பெண்ணோ? மகாலட்சுமி மாதிரி இருக்கு!' என்று என் காதைக் கடித்தாள். எத்தனையோ பெண்கள் இப்படி வந்திருக்கிறார்கள். இரண்டு நாட்கள் நாங்கள் மறைத்து வைத்திருக்க வேண்டும். பிறகு ஒரு நாள் இரவு மூடு லாரி வரும். சோற்றிலே மயக்க மருந்து கொடுத்துத் தூக்கிப் போட்டுக் கொண்டு போய்விடுவார்கள். இதற்காகவே இந்த மாந்தோப்பை என்னைக் குத்தகைக்கு எடுக்கச் சொன்னார்கள். இந்தப் பாழ் வீட்டில் நானும் என் மனைவியும் தான். ரதீந்தர் எப்போதாவது வருவார்; நிறையப் பணம் தருவார்.

''விஜய் எஜமானுக்கு உன்னை ரொம்பப் பிடிச்சுப் போச்சு கிளவா! உன்னை ஒரு வாட்டி மெக்காவுக்கு அனுப்பிப் பார்த்துட்டு வரச் சொல்லணும்னு சொல்லிக்கிட்டிருக்காரு!'' என்பார் ரதீந்தர்.

நம்ப பொழைப்பு இப்படியே ஓடிக்கிட்டிருக்கு. இரண்டு மூன்று வருஷமாய். சௌக்கியமாகத்தான் இருக்கேன். ஒரு குறையில்லே. ஆனால் வயித்து வலி தான் அதிகமாகிக்கிட்டேவந்தது...கிழவியும் போனப் புறம் வாழவே பிடிக்கலே.....

கிளவி ஞாபகம் வந்துட்டா தூக்கம் போய் விடுகிறது. 'கிளவா! என் கனவிலே சதா அந்தப் பொண்ணு வந்துக்கிட்டே இருக்கா! எனக்குக் கொடுத்த வாக்கை நீ எப்போ நிறைவேற்றப் போறேன்னு கேட்கிறா'ன்னு அவ சொல்ற மாதிரியே இருக்கு.

அதை நிறைவேற்றி விட்டுப் போகத்தான் இதோ இதை எழுதறேன். அந்தப் பொண்ணு பேரு விமலா. இரண்டு நாட்களும் அரைமயக்கத்திலே தான் கிடந்தது. அவ்வளவு மருந்து குடுத்திருக்காங்க.... மூணும் நாளும் கொண்டு போகிறதுக்கு முன்னாடி ஏதோ பாலிலே கரைச்சுக் குடுத்தாங்க...

இருந்த இரண்டு நாட்களும், 'அம்மா—அம்மா!'ன்னு அலட்டிச்சு! 'உடம்பெல்லாம் வலிக்குதே' என்று துடிச்சுது. இமையைத் திறக்கவே முடியாமல் கிடந்துச்சு.... ஆனா ஞாபகம் தப்பலே. 'நீங்கள்ளாம் யாரு? எங்க அண்ணா ரமேஷ் எங்கே?

வாசகர்களுக்கு..?

பதினெட்டாம் அத்தியாயத்துடன் சுவரில் இரு விழிகள் முடிவடைகிறது. அதாவது நவம்பர் 30ந் தேதி இதழுடன். கதையின் முடிவை ஊகித்துப் பத்துப் பதினைந்து வரிகளில் சுருக்கமாக எழுதி நவம்பர் 19ம் தேதிக்குள் எங்களுக்குக் கிடைக்குமாறு ஆசிரியர், கல்கி, சென்னை-31 என்ற விலாசத்துக்கு அனுப்பக் கோருகிறோம். மேற்படி தேதிக்குப் பிறகு வரும் கடிதங்களைப் போட்டியில் சேர்ப்பதற்கில்லை. முடிவைச் சரியாக ஊகித்துக் கூறுபவர்களுக்கு முன்பே அறிவித்தபடி ரூ. 500/- பரிசு உண்டு. ஒருவருக்கு மேல் சரியாக ஊகித்து எழுதினால் பரிசுத் தொகை பகிர்ந்தளிக்கப்படும். ஆசிரியர் தீர்ப்பே முடிவானது. மேலுறையில் ''மர்மக் கதை முடிவு'' எனக் குறிப்பிடவும்.

சேகர், எங்கே?' என்று கேட்டது. 'பாவிங்களா, ஏண்டா, என்னைத் தூக்கியாந்திங்கன்னு' கத்திச்சு. என் பொஞ்சாதி முகத்திலே அறையக் கூடச் செஞ்சது. 'உனக்கு ஒரு பொண் இருந்தா தூக்கி வருவியா!' என்று கதறிச்சு....

''அளாதே, குழந்தே! நான் உன் தகப்பன் மாதிரி!'' என்றேன்.

''நீ என் தோப்பன்னு என்னை இப்பவே எங்க வீட்டுக்காரர் சேகர்கிட்டே கொண்டு போய்ச் சேர்த்துடு''ன்னுது.

''யாரம்மா, உங்க வீட்டுக்காரர்? எங்கே இருக்காரு?''ன்னு கேட்டேன்.

''அவரு போலீசு ஆபீசரு.... பட்டணத்திலே இருக்காரு. சேகர்னு பேரு''ன்னுது.

''எப்படியம்மா, உன்னைப் புடிச்சாந்தாங்க?''ன்னு கேட்டேன்.

''ஆபீசிலேயிருந்து திரும்பி வந்தேன். கதவைத் திறக்கறப்போ மயக்க மருந்தை மூக்கிலே வைச்சு, காரிலே தூக்கிப் போட்டுக்கிட்டு வந்துட்டாங்க... மயக்கம் லேசாத் தெளிஞ்சப்போ சவுக்குத் தோப்பிலே கொண்டு போய்க்கிட்டிருந்தாங்க.... திமிறிக் கடிக்கப் பார்த்தேன்..... முடியலே... அப்புறம் ஒரு தோணியிலே ஏத்தி.... கடல்லே கொண்டு போய்.... அப்புறம் ஒரு மோட்டார்ப் படகிலே ஏத்தினாங்க.... அப்புறம் எங்கோ கரை இறங்கினது ஞாபகம் வர்றது..... லாரியிலே ஏறினதும் நினைவு இருக்கு..... அப்பத்தான் என்னமோ குடிக்கக் குடுத்தாங்க..... எல்லாமே மறந்து போயிடுச்சு......''

''அளாதே, அம்மா! நான் உன்னை உன் புருசன்கிட்டயே பத்திரமாச் சேர்த்துடறேன்''னேன்.

''சத்தியமா?''ன்னு கேட்டுக் கையை நீட்டிச்சு..... தயங்கினேன்.

''கையடிச்சுக் குடு, கெளவா!'' என்று என் பொஞ்சாதியும் வற்புறுத்தினா. அடிச்சுக் குடுத்தேன். ஆனால் அதை நிறைவேற்ற முடியலே...மறுநாளே விஜயனும் ரதீந்தரும் வந்துட்டாங்க.... ஒரு வழியும் தெரியலே.....

''கொஞ்சம் இருங்க.... புடவையைச் சரியா உடுத்திக் கூட்டியாரே''ன்னு என் பொஞ்சாதி அவளைக் கூட்டிக்கிட்டுப் பின்கட்டுக்குப் போனாள். 'நீ கவலைப்படாதேயம்மா. தைரியமா போம்மா.... நாங்க எப்படியாவது அந்தச் சேகரய்யாவுக்குத் தகவல் அனுப்பி வரவழைச்சு.... விஷயத்தைச் சொல்லிடறோம்..... அவரு எப்படியாவது உன்னை மீட்டுடுவாரு'ன்னு வாக்கும் குடுத்தா.

விஜயனும் ரதீந்தரும் வண்டியை வச்சுக்கிட்டுத் துடிச்சுக்கிட்டு நின்னாங்க.

''ஏன் ஸார்! இந்தப் பொண்ணை எங்கே கொண்டு போறீங்க?''ன்னு கேட்டேன்.

'அதெல்லாம் உனக்கு அநாவசியம்' என்று விஜய் கோபிச்சுக்கிட்டாரு. 'எல்லாப் பெண்களும் எங்கே போறாங்களோ அங்கேதான்'னு ரதீந்தர் சிரிச்சாரு. 'கூட்டியாடா சீக்கிரம்' என்று விஜய் கத்தினாரு....

எம்பொஞ்சாதி கூட்டியாந்தா. லாரியிலே ஏத்திக்கிட்டுப் போயிட்டாங்க..... மறுநாளே கிளவி படுத்த படுக்கையாகிட்டா.... மூணு மாசம் கெடந்தா.... பேச்சு மூச்சு இல்லே... முந்தா நாள் செத்துப் போயிட்டா. போகிறதுக்கு முந்திப் பேச்சு வந்தது. 'உடனேயே சேகரய்யாவுக்கு எழுது'ன்னு வாக்கு வாங்கிக்கிட்டுப் போயிட்டா....

எழுதிவிட்டேன். தப்பு நிறைய இருக்கும். மன்னிச்சுடுங்க..... விஜய் ஐயா பஞ்சிமிலே இருக்காரு... அங்கே போய்த் தேடினா ஒங்க பொஞ்சாதி பற்றித் தகவல் கிடைக்கும்.

இப்படிக்கு,
சன்னாசிக்கிளவன்

கோபால் எழுந்து கொண்டார். ''நான் இப்பவே பஞ்சிமுக்குப் புறப்படறேன், ஸார்!'' என்றார்.

''நம்முடைய பாபுவும் அங்கேதான் இருக்கான். அவன் உங்களுக்கு உதவுவான். பஞ்சிமிலிருந்து புறப்படுகிற ஒவ்வொரு பஸ், ரயில், படகு எல்லாவற்றையும்சோதனைபோடுங்கள். எனக்கு ஒரு சந்தேகம் இருக்கிறது. பஞ்சிமில்தான் துபாயில் விற்பதற்காகப் பெண்களைச் சேகரிக்கும் ஸ்தாபனங்கள் சில இருக்கின்றன. இந்த விஜயும் ரதீந்தரும் அதைச் சேர்ந்தவர்களாக இருக்கலாம். இந்தக் கோஷ்டியின் கையில் விமலா சிக்கி இருக்கிறாளே என்பது தான் கவலையாக யிருக்கிறது!'' என்றபோது சேகரின் குரல் நடுங்கியது.

''கவலைப்படாதீர்கள், ஸார்! இந்த மழைக் காலத்தில் கள்ளத் தோணிகள் கிளம்பாது. இப்போது அரபிக் கடலில் வானிலையும் சரியாக இல்லை. மழை விட்டால்தான் கடத்தலை ஆரம்பிப்பார்கள்..... அதற்குள் விமலாவைக் கண்டுபிடித்துவிடலாம்.''

''போய் வாருங்கள். கடவுள் உங்களுக்குத் துணை இருப்பார். நானே புறப்பட்டிருப்பேன். ஆனால் அதைவிட முக்கியமான வேலை ஒன்று இருக்கிறது'' என்றான் சேகர்.

அருண்தான் பின்னால் இரு கைகளையும் சேர்த்துக் கொண்டு அந்தச் சின்ன அறையில் பொறுமையின்றி உலாவிக் கொண்டிருந்தான். அடிக்கடி நின்று கைக்கடிகாரத்தைப்

# இருமலை முறியடிக்கும் சேம்பியன்

Alembic




**க்ளைகோடின்** அதிக அளவிலே வீட்டு உபயோகத்திற்கான வேறெந்த நிவாரணியையும் விட இருமலை அடித்துவிரட்டியுள்ளது. மூளை, தொண்டை, மார்பு, நுரையீரல்—ஆகிய 4 முனைகளிலும் இருமலைத் தாக்குகிறது—அதிவிரைவான இருமல் கட்டுப்பாட்டிற்கு உகந்தது • விரைந்து செயல்புரிவது • இன்சுவையுள்ளது • சிக்கனமானது.

**க்ளைகோடின்**—40 ஆண்டுகளுக்கு மேலாக லட்சோபலட்சம் மக்களின் நம்பிக்கைக்குப் பாத்திரமானது.

everest/617r/ACW tr

பார்த்துக் கொள்வதிலிருந்து அவன் யாரையோ எதிர்பார்த்துக் கொண்டிருப்பது தெரிந்தது. ''ஓ. இன்னும் இருபத்தைந்து நிமிஷங்கள்தானே இருக்கிறது. புறப்பட—இன்னும் இவளைக் காணோமே?'' என்று நகத்தைக் கடித்தான் அவன். பிரயாணத்துக்குச் சித்தமாக ஒரு சின்ன ஸூட் கேஸ் 'ரெடி'யாக மேஜையின் மீது உட்கார்ந்திருந்தது.

'இந்தப் பெண்களே இப்படித்தான்' என்று அவன் அலுத்துக் கொண்ட சமயத்தில் டெலிபோனின் இனிய ஓசை கேட்டது. 'சட்'டென்று பாய்ந்து எடுத்தான். ''ஹலோ அருள்! நான் ஸ்டேஷனில் பதினைந்து நிமிஷங்களாக காத்துக் கொண்டிருக்கிறேன். ரயில் புறப்பட இன்னும் இருபத்தைந்து நிமிஷமே இருக்கிறது! அங்கே என்ன பண்ணிக்கிட்டிருக்கே!'' ஒரு காட்டுக் குரல் அதட்டியது.

'' இதோ, கிளம்பி வந்து கொண்டே இருக்கிறேன், செட்டியார்! ஒரு கிளையண்ட்டுக்காகக் காத்திருக்கிறேன். ஐந்து நிமிஷத்தில் வருகிறேன்'' என்றான். ''இன்வெஸ்டிகேட் பண்ணினதை அவள் மடியில் கொட்டிவிட்டு, செக்கை வாங்கிப் பையில் போட்டுக் கொண்டு கிளம்ப வேண்டியதுதான்! பயப்படாதீர்கள். அடுத்து உங்கள் கேஸ்தான் கவனிக்கப் போகிறேன்! ஓ. இதோ கிளையண்ட்டே வந்துவிட்டார்'' — ரிஸீவரை வைத்துவிட்டு, ''மேடம்! வந்துட்டீங்களா! உட்காருங்க'' என்றான். மாலதி அழகாகப் புடவையைப் போர்த்திக் கொண்டு உட்கார்ந்தாள்.

''மேடம்! நான் அவரைக் கண்டுபிடித்து விட்டேன்!'' என்று புன்னகை செய்தான் அருள்தாஸ்.

'' உண்மையாகவா ?'' என்று பரபரப்புடன் கேட்டாள் மாலதி. அவள் கண்களில் நீர் ததும்பி, 'இதோ உதிர்ந்துவிடுவோம்' என்று பயமுறுத்தியது. ''ரமேஷைக் கண்டு பிடித்துவிட்டீர்களா ?''

''எஸ் மேடம்! ஆனால் இப்போ அவருக்கு அந்தப் பெயர் இல்லை. மிஸ்டர் கார்த்திக் அவரை ரஹீம் என்று அழைக்கிறார்.''

''வாட் ?'' என்று அதிர்ந்தாள் மாலதி. ''ரஹீமா ? முஸ்லிம் பெயராக இருக்கே! முஸ்லிமாக மாறிவிட்டாரா என்ன ?''

'' எனக்குத் தெரியாது. ஆனால் கைலி உடுத்தியிருக்கிறார். தாடி வளர்த்துக்கொண்டு தலையில் குல்லாயும் கறுப்புக் கண்ணாடியும் தரித்திருக்கிறார்!''

''அட கடவுளே!'' என்று தலையைப் பிடித்துக் கொண்டாள் மாலதி.

''மேடம்! எனக்கு நேரமில்லை. இன்னும் பதினைந்து நிமிஷங்களிலே நான் 'பிருந்தாவன்'லே இருந்தாக வேண்டும்.... அதற்குள் எல்லாவற்றையும் சொல்லிவிடுகிறேன்.''

''சொல்லுங்கள், அருள்'' என்று கண்களைத் துடைத்துக் கொண்டாள் மாலதி. ''எங்கே இருக்கிறார், அவர் ?''

''விசாகப்பட்டினத்துக்கருகில்!'' என்ற அருள்தாஸ் ஒரு சின்னக் குறிப்பேட்டை எடுத்துப் படித்தான். ''நியூ காலனி; பதின்மூன்றாவது தெரு.... இருபத்தெட்டாம் நம்பர் வீடு. கூட வசிப்பவர் பெயர் கார்த்திக். ஒரு டாக்டர்..... உயரமா ஒல்லியா விருக்கார். கல்யாணமாகலை. வெரி நைஸ் மேன். ஹிந்து. தாம் உண்டு தம் வேலை உண்டு என்று இருப்பவர்.... காலை ஆறு மணிக்கு ரமணன் நர்ஸிங் எஸ்டேட்டுக்குப் போகிறார்; சாயங்காலம் திரும்புகிறார்.... கார் கொடுத்திருக்கிறார் மிஸ்டர் ரமணன்.''

''மிஸ்டர்!'' பொறுமையிழந்து கூவினாள் மாலதி. ''யார் கேட்டார்கள், இவங்களைப் பற்றி.... ரமேஷைப் பற்றிச் சொல்லுங்க.''

''எக்ஸ்க்யூஸ்மீ! துப்பறிபவர்களுக்கு ஓர் ஆளைவிட அவனைச் சுற்றியுள்ள ஒவ்வொன்றுமே மிக முக்கியம். எல்லாத் தகவல்களையுமே அவர்கள் திரட்டியாக வேண்டும்..... இந்தக் கார்த்திக், இந்த ரமணன் எல்லாருமே முக்கியமானவர்கள்தான். இந்த ரமணனுக்கு ஒரு மனைவி இருக்கிறாள்; அந்த மனைவிக்கு ஒரு பிரைவேட் நர்ஸ் இருக்கிறாள்.''

''மிஸ்டர் அருள்! ஸ்டாப் இட்! எனக்குத் தலையே சுற்றுகிறது. அப்புறம் அந்த நர்சுக்கு யார் இருக்கிறார்கள் ?'' என்று கத்தினாள் மாலதி.

'' ஒரு காதலன் இருக்கிறான். அவனைப் பார்க்க நியூ காலனி மார்க்கெட்டுக்கு மாலை வேளைகளில் வருகிறாள். அங்கே அவள் சந்திப்பது ஒரு முஸ்லிம் சமையல்காரனை.... அந்தச் சமையற்காரன் யார் தெரியுமா ? அவர் தான் உங்கள் ரமேஷ்! அதாவது ரஹீம்.''

''என்னது ?'' — இடியே தலையின் மீது விழுந்து விட்டது போலிருந்தது மாலதிக்கு.

''அமைதியாக இருங்கள், மேடம்! ஆண் என்று இருந்தால் அவனுக்கு ஒரு காதலி இருக்கத்தான் செய்வாள். அதில் திடுக்கிட ஒன்றுமே இல்லை. மிஸ் ரோஸி அழகான பெண். கெட்டிக்காரி.... அவளையும் பேட்டி கண்டு விட்டேன். 'இரண்டு மாதங்களில் நானும் மிஸ்டர் ரஹீமும் ஃபாரின் போய் விடப் போகிறோம்' என்றாள்.''

''அம்மா!'' என்று முகத்தில் அறைந்து கொண்டு கதற வேண்டும் போலிருந்தது மாலதிக்கு. 'ரமேஷ்! ரமேஷ்! இத்தனை பெரிய துரோகியா நீ!' மனத்தில் திடீரென்று ஒரு வைராக்கியம் பிறந்தது. 'ரமேஷ்! இந்த மாதிரி விளையாட உன்னை நான் அனுமதிக்கப் போவதில்லை!'

'சட்'டென்று எழுந்தாள். ''தாங்க்யூ மிஸ்டர் அருள்தாஸ்.'' — கைப் பையைத் திறந்தாள்..... ஐந்து நூறு ரூபாய் நோட்டுக்களை எடுத்து மேஜையின் மீது வைத்துவிட்டுப் புயலாகத் திரும்பி வெளியேறினாள்.

அவள் நடைபாதையில் கால் வைத்ததும் சொல்லி வைத்தது போல் சற்றுத் தூரத்திலிருந்த ஒரு டாக்ஸி ஊர்ந்து வந்து அருகே நின்றது. அதன் கதவை ஒரு கை திறந்தது. 'கம் இன் மாலு!'

மாலதிக்கு நெஞ்சே 'திக்'கென்று நின்று விட்ட மாதிரி இருந்தது. அந்தக் குரலுக்குக் கட்டுப்பட்டு யந்திரமாக ஏறி உட்கார்ந்து கொண்டாள். விம்மி விம்மி அழுதாள்.

''ஐ நோ எவ்வரி திங்.... டோண்ட் கிரை மை லிட்டில் பேர்ட்'' என்றவாறே சேகரின் கரம் அவள் தலையை ஆறுதலாக வருடியது.

(தொடரும்)

---

**நியூஸ் போதும் : வியூஸ் வேண்டாம்!**

பிரதமர் இந்திரா காந்தி செய்தித் தாள்களில் வரும் செய்திகளை மட்டும் படிக்கிறார். அவைகள் எழுதும் தலையங்கங்களைப் படிப்பதில்லை.

— இம்பிரிண்ட் - பாலி



# உயிர் குடித்த கழிவு நீர்க் கிணறு!

**சென்னையில் கழிவு நீர்க் கிணற்றுக்குள் அடைப்பை அகற்றும் பொருட்டு இறங்கிய திரு சின்னப்பையன் காலமானதும் அவரைக் காப்பாற்ற முனைந்த விஜயராகவலுவும் அதே கதிக்கு ஆளானதும் நம் நெஞ்சை உருக்கி விட்ட செய்தி. இது பற்றிச் சென்னை மாநகராட்சி ஆணையர் திரு வே. கருப்பன் எழுதுகிறார் :**

சென்னையில் சுமார் ஒரு லட்சம் வீடுகள், பாதாளக் கழிவு நீர் அமைப்புடன் இணைக்கப் பட்டுள்ளன. இது சுமார் 1071 கிலோ மீட்டர் நீளத்திற்கு, 6'' முதல் 33'' வரையில், பல்வேறு விட்ட அளவுகள் கொண்ட பெருங்குழாய்களைக் கொண்டது. 38 கழிவு நீர்த் துருத்தி நிலையங்கள், நகரின் பல்வேறு பாகங்களில் இயங்கி வருகின்றன.

இவற்றிலிருந்து வடிகட்டப்பட்ட கழிவு நீர் மூன்று புல் பண்ணைகளுக்கும் எஞ்சிய பகுதி, கடலில் கலக்குமாறும் வெளியேற்றப் படுகிறது.

கழிவு நீர்த் துருத்தி நிலையங்களில் உறுஞ்சு கிணற்றிலுள்ள சல்லடைகளைச் சுரண்டிச் சுத் தப்படுத்துதல், உறிஞ்சிக் குழாய்களிலிருக்கும் வண்டல் அல்லது அடைப்புகளை நீக்குதல் போன்ற பணிகளுக்கு, முழுக்காளர் பயன் படுத்தப்படுகின்றனர். கிணற்றுக்குள், இறங்குவதற்கு முன்பு, எல்லாத் தற்காப்பு ஏற்பாடுகளும் பின்பற்றப்படுவதால், சாதாரணமாக எந்த அசம்பாவிதமும் ஏற்படுவதில்லை. எப்போதோ ஒரு சமயம், தொழிலாளி கழிவு நீர்க் கிணற்றில் இறங்கும் பொழுது, அங்கு ஏற்படும் ஹைட்ரஜன் சல்பைட் வாயுவினால் தாக்கப்பட்டு மயக்கமடைந்து விழுகின்றான்.

கழிவுநீர்க் கிணற்றுக்குள் இறங்குவதற்கு முன்பு, விபத்து ஏற்படாமல் இருப்பதற்காக, கிணற்றுள் இறங்கும் முழுக்காளியின் உடம்பில், தற்காப்புக் கயிற்றைக் கட்டிக் கொண்டுதான் இறங்குவது நடைமுறையிலுள்ள வழக்கம். அப்படிச் செய்வது, ஆபத்து நேரத்தில், கிணற்றுக்கு மேலே, வெளியிலுள்ள ஊழியர்களுக்கு ஆபத்தை உணர்த்தி, உதவிக்கு அழைக்கவும், உதவியாளரும் உடனடியாகக் கிணற்றுள் இருப்பவர்களைத் தூக்கவும் வசதியாக இருப்பதற்காகவே. சிற்சில நேரங்களில், ஒரு சில நீர் முழுக்காளிகள், அளவுக்கு மீறிய தன்னம்பிக்கை கொண்டு, பாதுகாப்புக் கயிற்றை, உடம்பில் கட்டிக் கொள்ளாமலேயே கழிவு நீர்க் கிணற்றுள் இறங்கி விடுவதும் உண்டு.

இது போன்ற வேளைகளில், இப்படிப் பட்ட ஆபத்து ஏற்படுகிறது. எனவே, தற்போது விபத்துக்கள் ஏற்படாமல் இருப்பதற்காகவே, நடைமுறையிலிருந்து வரும் விதிமுறைகளைக் கட்டாயமாக ஒவ்வொருவரும் பின்பற்றியே தீர வேண்டும் என்பதற்கான உத்தரவுகள் பிறப்பிக்கப்பட்டுள்ளன.

அண்மையில் நடைபெற்ற விபத்தில் திரு சின்னப்பையன் என்னும் முழுக்காளி அவர் வேலை செய்து கொண்டிருந்த சர்ப்புக் கிணற்றுக்குள் அடைப்பை அகற்றும் பொழுது, தற்செயலாக அவர், நச்சு வாயுவினால் தாக்கப் பட்டு இறந்தார். மேலும், அதே நிலையத்தைச் சேர்ந்த திரு சாரங்கபாணி என்ற மற்றொரு தொழிலாளி, நச்சு வாயுவினால் தாக்குண்ட திரு சின்னப்பையனைக் காப்பாற்றுவதற்காக அக்கிணற்றில் இறங்கிய பொழுது, அங்கு ஏற்பட்ட நச்சுவாயுவின் தன்மையால் அவரால் எதுவும் செய்ய முடியாமற் போகவே, சாரங்கபாணி வெளியேறி வந்து விட்டார். அதே நிலையத்தினுள் மற்றோரிடத்தில் பணியாற்றிக் கொண்டிருந்த காலம் காப்பாளர் (டைம் கீப்பர்) திரு விஜயராகவலு அந்தக் கிணற்றை நோக்கி வேகமாக ஓடிச் சின்னப்பையனைக் காப்பாற்ற முயன்றார்; அவரது முயற்சியில் அவரும் நச்சு வாயுவுக்குப் பலியாகி இறந்து விட்டார். இதுபோன்ற விபத்து, கழிவுநீர்த் துருத்தி நிலையங்களில் சாதாரணமாக ஏற்படுவதில்லை. இந்த விபத்தை எண்ணும் போது விதியின் வலிமையையும் நினையாமலிருக்க முடியவில்லை.

இந்த வடிகால் துறையைச் சேர்ந்த முழுக்காளி திரு சின்னப்பையன் என்பவர் 46 வயதானவர்; இத்துறையில் 25 ஆண்டுகள் பணி புரிந்துள்ள நிரந்தர ஊழியர். இவருக்கு மனைவியும், 6 முதல் 12 வயதுக்குட்பட்ட 4 குழந்தைகளும் உள்ளனர். திரு. விஜயராகவலு என்னும் காலம் காப்பாளர் (டைம் கீப்பர்) மூன்றரை ஆண்டுகள் இத்துறையில் பணி செய்துள்ளார். அவருடைய வயது 26; அவர் திருமணம் ஆகாதவர். அவருக்கு, வயதான தாய் தந்தையர், ஒரு சகோதரன், சகோதரிகள் உள்ளதாகத் தெரிகிறது. மேற்குறிப்பிட்ட விபத்துக்குள்ளான இரு நபர்களின் வாரிசுகளுக்கும், உடனடி உதவித் தொகையாக ஒவ்வொருவருக்கும் ரூ. 500 மாநகராட்சியின் சிறப்பு அதிகாரி அவர்களால் வழங்கப் பெற்றது. திரு. சின்னப்பையன் என்பவர் விஷயத்தில், அவர் சென்னை மாநகராட்சியின் வடிகால் துறையின் ஒரு நிரந்தர ஊழியர் என்பதால், வழக்கமான குடும்ப நல நிதியாகிய ரூ. 10,000 மாநகராட்சியினரால் முறைப்படி அவருடைய வாரிசுதாரருக்கு வழங்கப்படும்.



சின்னப் பையன்

# குறைந்த முதலீட்டில் சிறந்த முறையில் தேங்காய் நார் தயாரிக்க இயந்திரங்கள் இதோ!

தேங்காய் நார் தயாரிக்க இந்தியாவில் இதுவரை சரியான இயந்திரங்கள் இல்லாமல் இருந்தது. அதிக அளவு உற்பத்தி செய்து ஏற்றுமதி செய்ய முடியாமல் இருந்தது.

இப்பொழுது இதற்குத் தேவையான எல்லா இயந்திரங்களையும் நாங்கள் தயாரித்துள்ளோம். இதன் மூலம் நீங்கள் குறுகிய காலத்தில் அதிக அளவு தேங்காய் நார் உற்பத்தி செய்யலாம். அதிக அளவு ஏற்றுமதியின் மூலம் அதிக வருவாய் தேடிக் கொள்ளலாம்... உங்களுக்கும் உங்கள் தேசத்திற்கும்!

இதுவரை தென் இந்தியாவில் 12 இடங்களில் எங்கள் என்னுர் இயந்திரங்கள் நல்ல முறையில் செயல்பட்டுக் கொண்டிருக்கின்றன

மற்ற விபரங்களுக்கும் சரியான ஆலோசனைக்கும் எங்களை அணுகுக:

Manufacturers:

**BHARAT MOTORS**

5, Greames Road, Madras-600006

Phone: 86204 Cable: FIBRO-FLEX



Turbo Cleaner



Defibering Machine



Revolving Screen



Fibre Baling Press

**கடைசிப் பக்கம்**

**கண்ணதாசன்**



# 'மகாநிர்வாணம்'

"புத்ததேவா."

அமைதியான குரல் ஒன்று ஒலித்தது.

தியானத்தில் அமர்ந்திருந்த புத்தன் கண்களைத் திறந்து பார்த்தான். இருபத்தைந்து வயதுக்கு மேற்படாத இளம் பிட்சு ஒருவன் நின்று கொண்டிருந்தான்.

புத்தன் கண்களாலேயே கேள்வி கேட்டான். பிட்சு சொன்னான்:

"புத்த தேவா! துறவறம் எனக்குக் கசந்து விட்டது. நான் இல்லறத்துக்குத் திரும்பலாம் என்று கருதுகிறேன்."

புத்தன் இரண்டு கைகளாலேயும் முகத்தைத் துடைத்துக் கொண்டு, "நல்லது. இல்லறமாயினும், துறவறமாயினும் மனிதனுக்கு அவை அறமே. - துறவைத்தான் நீ உறுதியாகக் கடைப் பிடிக்க வேண்டும் என்று நான் வற்புறுத்தவில்லை. எது உனக்கு மகிழ்ச்சி தரக் கூடியதோ, எது பிறருக்கு உதவுவதற்கு உனக்கு வழிவகுத்துத் தருகிறதோ, அதை நீ மேற்கொள்வதில் எனக்குத் தடையில்லை" என்றான்.

பிட்சு மண்டியிட்டு அவனை வணங்கி விட்டுப் புறப்பட்டான்.

சென்றவனை நிறுத்தி, "இதோ பார், இல்லறமும் கசந்து விட்டது என்று திரும்ப வந்து சொல்ல மாட்டாயே!" என்று கேட்டான் புத்தன்.

பிட்சு யோசித்தான்.

"இப்போது யோசித்தால் இது விளங்காது; அனுபவித்தால்தான் விளங்கும். போய் வா" என்றான் புத்தன்.

காலங்கள் ஓடின.

அவை பத்து ஆண்டுகளாயின.

புத்தன் எங்கே, எப்படி இருந்தானோ, அங்கே அப்படியே இருந்தான்.

"புத்த தேவா!"

பத்து ஆண்டுகளுக்கு முன்பு ஒலித்த அதே குரல் அப்படியே ஒலித்தது.

புத்தன் கண்களைத் திறந்து பார்த்தான்.

பிட்சு மௌனமாக நின்றான்.

"இல்லறம் கசந்து விட்டதா?" புத்தன் புன்னகையோடு கேட்டான்.

பிட்சு அதே மௌனம்.

"இதோ பார், நோயாளியாக இருக்கும் போது மருத்துவன் பெரிதாகத் தோன்றுவான். மருத்துவருக்கோ நோயாளியே அதிருஷ்டக்காரனாகத் தோன்றுவான். உலகத்திலுள்ள தலையாய அறங்கள் இரண்டுதான்: இல்லறம், துறவறம். துறவறத்திலிருந்து இல்லறத்துக்குப் போனவன், மீண்டும் துறவறத்துக்கு வந்தே சேருவான். ஆனால் இல்லறத்திலிருந்து துறவறத்துக்குப் போனவன் திரும்புவதில்லை. நீ பக்குவம் இல்லாமல் சந்நியாசி ஆனவன், சுமை எங்கே அதிகம் என்று அறியாமல் வந்தவன். இப்போது அனுபவப்பட்டு வந்திருக்கிறாய், இனி நீ துறவறத்துக்கு லாயக்கானவன் என்றாலும் துறவறம் உனக்கு லாயக்கற்றது. ஆன்மா சிந்திக்கத் தொடங்கும் இடத்திலேயே அதைக் கையில் பிடித்துக் கொள்பவன் தான் நல்ல சந்நியாசி. அவர்களே பிறருக்குப் போதிக்கும் தகுதி படைத்தவர்கள். எனவே, நீ இல்லறத்துக்கே மீண்டும் திரும்பு."

பிட்சு வணங்கி விட்டுத் திரும்பினான்.

புத்த மடாலயத்திலிருந்து இளம் பிட்சுக்களின் குரல் ஓங்கி ஒலித்தது.

"புத்தம் சரணம் கச்சாமி
சங்கம் சரணம் கச்சாமி
தர்மம் சரணம் கச்சாமி"

புத்தன் மடாலயத்துக்குள் நுழைந்தான். சிஷ்யர்களெல்லாம் அமைதியாக அமர்ந்திருந்தார்கள். புத்தன் ஏற்கனவே ஏற்பாடு செய்திருந்தபடி தேவதாசி ஆம்ரபாலி உள்ளே நுழைந்தாள்.

திரண்டெழுந்த அங்கங்கள்; இறுக்கிக் கட்டிய கச்சை; அள்ளி முடித்த கூந்தல்; முழங்கால் வரையில் ஆடை; மின்னி எழுந்த கண்கள், மெதுவாகத் துடிக்கும் இதழ்கள்; ஆம்ரபாலியின் நடனம் ஆரம்பமாயிற்று.

மடாலயத்தில் காம நடனமா?

சிஷ்யர்களுக்கு ஒரே உற்சாகம்!

ஆட்டம் தொடங்கிய அரை நாழிகையில் புத்தன் மூன்று சிஷ்யர்களைத் தன் பக்கம் அழைத்து நிறுத்திக் கொண்டான்.

ஆட்டம் தொடர்ந்தது.

மேலும் சில சிஷ்யர்களைப் புத்தன் தன் பக்கம் அழைத்துக் கொண்டான்.

ஆட்டம் மேலும் தொடர்ந்தது.

இப்பொழுதும் சில சிஷ்யர்களைத் தன் பக்கம் இழுத்துக் கொண்டான்.

ஆட்டம் முடிந்த போது இரண்டு பேர் மட்டுமே அமர்ந்திருந்தார்கள்.

சுமார் ஐம்பது பேரில் நாற்பத்தெட்டுப் பேர் நின்று கொண்டிருந்தார்கள்.

புத்தன் அவர்களைப் பார்த்துச் சொன்னான்:

"உங்கள் முகத்திலிருக்கும் வியர்வையைத் துடையுங்கள். குளிர்ச்சியான இடத்தில் முகம் வியர்க்கிறதென்றால், ஆன்மா அலைகிறதென்று பொருள். எவனுடைய உடம்பை ஆன்மா ஆள்கிறதோ, அவன் யோகி. எவனுடைய உடம்பு ஆன்மாவை ஆள்கிறதோ, அவன் போகி.

"ஒரு பெண்ணின் முழு நிர்வாணத்தில் எவன் சபலப்படவில்லையோ, அவனே மகா நிர்வாணத்துக்கு லாயக்கானவன். அந்த இரண்டு பேர் எனக்குப் போதும்!"

ஆம்ரபாலி ஆடைகளை எடுத்துத் தன் உடம்பை மூடிக் கொண்டாள்.

'புத்தம் சரணம் கச்சாமி' என்ற குரல் மீண்டும் எழுந்தது.

அதை ஐம்பது பேர் சொன்னபோது இல்லாத கம்பீரம், அந்த இரண்டு பேர் சொன்னபோது இருந்தது.

Printed and published by V. Vaidyanathan on behalf of Messrs. Bharathan Publications Private Limited at Kalki Press, Chetput, Madras-600031. Editor: K. Rajendran

# அன்றும் இன்றும் சிலருக்கு அதே இளந்தளிர் மேனி!






பியர்ஸ் — அசல் கிளிசரின் சோப்

**பியர்ஸ் சருமக் களை...**
**கன்னிப் பருவக் களை**

இந்துஸ்தான் லீவரின் தரமான தயாரிப்பு. லின்டாஸ்-PS. 54-77 TM

REGISTERED No. M. 4392

Registered as a Newspaper in Ceylon

இலங்கையில் விலை 75 சதம் (தபால் செலவு தனி)

சும்மாளமாகக் கொரித்திடுவீர் மொனேகோ




பார்லே

# மொனேகோ

## அப்படியே சாப்பிட அருமை—
## மகுடம் வைத்துச் சாப்பிட மஜா

இந்தியாவின் உச்ச விற்பனை உடைய உப்பு பிஸ்கட்—
—இப்போது, கையடக்கமான ஜிகினுத் தாளுறைப் பேக்கெட்டுகளிலும் வருகிறது.

everest/95/PP-tm